# திருக்கோயில்

அக்டோபர் 1979 ரூ 1-25



இந்து சமய அறநிலைய (ஆட்சி)த் துறை வெளியீடு



திருவேற்காடு தேவி உபாசகர் தவத்திரு சுவாமி இராமதாசர் அவர்களின் 64வது பிறந்த நாள் விழா நிகழ்ச்சியில், கலந்து கொண்டு சிறப்பித்த பெருமக்கள்.



அறநிலைய ஆணையர் திரு யு. சுப்ரமண்யன், ஐ.ஏ.எஸ்., அவர்கள், சுவாமி இராமதாசர் அவர்களுக்கு, விழாக்குழுவின் சார்பில் பொன்னாடை போர்த்தி மலர்முடி சூட்டுதல்.

முகப்பு :

காஞ்சிபுரம்
அருள்மிகு திருவேகம்நாதர்
திருக்கோயிலின் அழகிய கோபுரம்

# திருக்கோயில்

மாலை: 22 | சித்தார்த்தி ஆண்டு-ஐப்பசித் திங்கள்-அக்டோபர்-1979 | மணி: 1

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர் களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்,

ஆணையர் அவர்கள்,
அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை — 600 034

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

ஜனவரி முதல் டிசம்பர் வரை உள்ள காலம், சந்தா ஆண்டு எனக் கணக்கிடப்படும். இடைப் பட்ட காலத்தில் சந்தாதாரராக விரும்புவோர், முழு ஆண்டிற்குரிய சந்தாத் தொகை ரூ. 15—00 உடன், இடைப்பட்ட காலத்தில் உள்ள மாதங் களுக்கு, ஒரு இதழ் ரூ. 1—25 வீதம் சேர்த்துப் பணம் அனுப்பிச் "சந்தாதாரர்" ஆகலாம்.

தனிப்பட்ட "சந்தாதாரர்கள்' ஒவ்வொரு வரும் நேரடியாக, ஆணையர் அலுவலகத்திற்கே மணியார்டர் மூலம் பணம் அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும் பொழுதும, தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும்பொழுது, மணியார்டர் கூப்பனில், புதிய சந்தா என்பதைக் குறிப்பிடு மாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் [PINCODE] எண்ணுடன் தெரிவிக்குமாறும், கேட்டுக்கொள்ளப்படுகிறது.

வெளிநாட்டுச் சந்தாதாரர்களின் முகவரிகள் அனைத்தும் செவ்வனே பதிவு செய்து வரிசைப் படுத்தப் பெற்று அவர்கள் எல்லோருக்கும் முறை யாக இதழ்கள் அனுப்பப்படுகின்றன. தற் பொழுது வெளிநாட்டுச் சந்தாதாரர் ஒவ்வொரு வருக்கும் ஆண்டு ஒன்றுக்கு அஞ்சல் செலவு மட்டுமே ரூ. 9—60 ஆகின்றது. ஆதலால் வெளி நாட்டுச் சந்தா, ரூ. 20—00-ல் இருந்து ரூ. 25—00 ஆக ஜனவரி 1978 முதல் மாற்றி அமைக்கப் பட்டது. வெளிநாட்டுச் சந்தாதாரர்கள் அவ்வப் போது தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

## பொருளடக்கம்



ஆசிரியர் : ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

இந்து சமய அறநிலைய (ஆட்சி)த் துறை வெளியீடு

# "அறுவகைச் சமயங்கள்"

ந. ரா. முருகவேள், M.A.,M.O.L.

**முன்னுரை :**

''அறுவகைச் சமயங்கள்'' என்னும் தொடர் தொன்றுதொட்டு வழங்கி வருவது. ''அறுவகைச் சமயத்து அறுவகை யோர்க்கும், வீடு பேறாய் நின்ற விண்ணோர் பகுதி கீடம் புரையும் கிழவோன்'' என்பது திருவாசகம். ''அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய், வேறாம் குறியது உடைத்தாய் வேத ஆகமங்களின் குறி இறந்து....'' என்பது சிவ ஞான சித்தியார். சமய தத்துவ நூலாசிரியர்கள், இவ்வறுவகைச் சமயங்கள் யாவை? என்பன குறித்துத், தத்தம் நூல்களிற் பலவேறு வகைகளிற் குறிப்பிட்டுள்ளனர்.

அறுவகைச் சமயங்களாவன: சைவம், சிவ பெருமானை வழிபடுவது; வைஷ்ணவம், விஷ்ணுவை வழிபடுவது; சாக்தம், சக்தியை வழிபடுவது; சௌரம், சூரியனை வழிபடுவது; காணபத்தியம், கணபதியை வழிபடுவது, கௌமாரம், குமரனாகிய முருகனை வழிபடுவது என்று சிலர் விளக்கம் கூறுவர்.

இனி, சமயங்களைப் புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என நான்கு வகைப்படுத்தி ஒவ்வொன்றினையும் பின்வருமாறு ஆறுவகையாகக் கூறுவதும் உண்டு. இவற்றுள் **புறப்புறம்** என்னும் சமயங்கள், உலகாயதம் மாத்தியமிகம் யோகாசாரம் சௌத்திராந்திகம் வைபாடிகம் ஆருகதம் என்பன. புறச்சமயங்கள், தருக்கம் மீமாஞ்சை ஏகான்மவாதம் சாங்கியம் யோகம் பாஞ்சராத்திரம் என்பன. **அகப்புறம்** என்னும் சமயங்கள், பாசுபதம் மாவிரதம் காபாலம் வாமம் வைரவம் ஐக்கியவாதம் என்பன. **அகம்** என்னும் சமயங்கள், பாடாணவாதம் பேதவாதம் சிவசமவாதம் சிவசங்கிராந்தவாதம் ஈசுரஅவிகாரவாதம் சிவாத்துவிதம் எனப்படும்.

**அறுவகைச் சமயங்கள் :**

எனினும், பொதுவாக ''அறுவகைச் சமயங்கள்'' என இந்தியத் தத்துவ நூல்களில் குறிக்கப்பெறுபவை, நியாயம் வைசேடிகம் சாங்கியம் யோகம் மீமாஞ்சை வேதாந்தம் என்னும் ஆறுமேயாம். இவற்றை ''ஷட் தரிசனங்கள்'' என வழங்குவர். இவைகளை விளக்கியருளிய ஆசிரியர்களின் பெயர்கள் முறையே பின்வருவனவாகும்.

1. அக்கபாதர் (கோதமர்) - நியாயம்
2. கணாதர் - வைசேடிகம்
3. கபிலர் - சாங்கியம்
4. பதஞ்சலி - யோகம்
5. ஜைமினி - மீமாம்சம்
6. வாதராயணர் (வியாசர்) - வேதாந்தம்

பண்டைக் காலத்திலேயே இந்திய நாடானது, கிரேக்கர் உரோமர் எகிப்தியர் சீனர் அராபியர் முதலிய பல நாட்டு மக்களுடன் வாணிபம் முதலிய தொடர்புகள் கொண்டிருந்தது. அதன் பயனாக இந்திய நாடும் பிற நாடுகளும், தமக்குள் பல பொருள்களைக் கொண்டும் கொடுத்தும் கலந்து உறவாடி மகிழ்ந்து வாழ்ந்து வந்தன. இதன் விளைவாக இந்திய நாட்டுத் தத்துவக் கொள்கைகளுக்கும், மேலை நாட்டுத் தத்துவக் கொள்கைகளுக்கும் இடையே பலவகை ஒப்புமைத் தன்மைகள் இயல்பாக அமைந்து விளங்குகின்றன. இந்திய நாட்டுத் தத்துவக் கொள்கைகளை நன்கு கற்று ஆராய்ந்துணர்ந்தவர் ஆகிய சர். வில்லியம் ஜோன்ஸ் என்னும் பேரறிஞர், பின்வருமாறு கூறியிருக்கும் ஒப்புமையாய்வுக் கருத்துரை, இங்கு நாம் உணர்ந்து மகிழ்ந்து பயன் பெறத்தக்க செய்தியாகும்.

''இந்தியத் தத்துவக் கொள்கைகளுள் நியாயம் பெரிபடெடிக் கொள்கையையும், வைசேடிகம் ஐயோனிக் கொள்கையையும், மீமாம்சம் பிளேட்டோவின் கொள்கையையும் சாங்கியம் இட்டாலிக் கொள்கையையும், யோகம் ஸ்டாயிக் கொள்கையையும், பெரிதும் ஒத்துள்ளன. எனவே கோதமர் என்னும் அக்கபாதர் அரிஸ்டாட்டிலையும், கணாதர் தேல்சையும், ஜைமினி சாக்ரட்டீசையும், வியாசர் எனப்படும் வாதராயணர் பிளேட்டோவையும்,

கபிலர் பித்தாகரஸையும், பதஞ்சலி ஜெனோவையும் போன்றவர்களைக் காணப்படுகின்றனர்''.* இங்ஙனமே கோல்ப்ரூக் (Colebrook), ரிச்சர்ட் கார்பே (Richard Garbe) முதலிய பல அறிஞர்களும் கருதுகின்றனர். மேலைநாடு கீழை நாடுகளின் தத்துவக் கொள்கைகளையும் நூல்களையும் ஒப்பிட்டு ஆராய்ந்து உணர விரும்புபவர்களுக்கு, இக்குறிப்பு மிகவும் பயன்படும். இனி, மேற்குறித்த நியாயம் வைசேடிகம் சாங்கியம் யோகம் மீமாம்சம் வேதாந்தம் என்னும் அறுவகைச் சமயங்களைப்பற்றி, இங்கு முறையே ஒரு சிறிது சுருக்கமாகக் காண்போம்.

### (1) நியாயம்

'நியாயம்' என்னும் சொல்லுக்கு 'ஒரு பொருளின் உள்நுழைந்து காண்பது' (நி-உள்ளே, ஆய-செல்லுதல்) என்பது பொருள். இதற்கு 'ஆன்வீக்ஷிகி -தர்க்கவித்தை - வாதவித்தை' என வேறு பெயர்களும் வழங்கும். நியாய சாத்திரம் அருளிச் செய்தவர், கௌதமர் (கோதமர்). இவருக்கு அட்சபாதர் (கால்களில் கண்ணுடையவர்), தீர்க்கதபசி (நீண்டகாலம் தவம்புரிந்தவர்) என வேறு பெயர்களும் வழங்கும். இவரது காலம் கி.மு.550 என ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். வடபீகார் மாநிலத்தில் தற்போது தர்பங்கா என்று வழங்கும் பழைய மிதிலை நகருக்கு வடமேற்கே 28 கல் தொலைவில் உள்ள கௌதமத்தானம் என்னும் கிராமத்தில், இவர் பிறந்தார் என்பர். அங்கு ஒவ்வோர் ஆண்டும் சித்திரை மாதம் 9-ஆம் தேதியில், இவர் நினைவாக ஒரு விழா நடைபெறுகின்றது. கௌதமத் தானத்திற்குக் கிழக்கே 2 கல்லில் அகல்யாத்தானம் என்னும் கிராமம் ஒன்றும், இவர் தம் மனைவியாகிய அகல்யையின் பெயரால் உள்ளது. மிதிலை நகரின் எல்லையில், ஜீரோததி ஆற்றங்கரையில், இவரது ஆச்ரமம் இருந்ததாகக் கூறுவர். கங்கையும் சரயுவும் கூடும் கோத்னா என்னும் இடத்திலும், இவர் சில காலம் வாழ்ந்ததாகத் தெரிகின்றது. மேற்குக் கடற்கரையில் கத்தியவார் மாவட்டத்தில் உள்ள பிரபாசா என்னும் யாத்திரைத் தலத்தில், கௌதமர் தமது இறுதி ஓய்வுநாட்களைக் கழித்தார். இவரைப் போலவே இவரது புதல்வராகிய சதானந்தர் என்பவரும், மிதிலையில் சனகமகாராசரின் அவைக்களத்தில் அரச குருவாக விளங்கினார் என நூல்கள் கூறுகின்றன.

கோதமர் அருளிய நியாய சாத்திரம், பிரமாணம் பிரமேயம் சம்சயம் பிரயோசனம் திருட்டாந்தம் சித்தாந்தம் அவயவம் தர்க்கம் நிர்ணயம் வாதம் செற்பம் விதண்டை ஏதுவாபாசம் சலம் சாதி நிக்கிரகத்தானம் என்னும் பதினாறு பொருள்களைப் பற்றி விளக்குகின்றது.

(1) **இவற்றுள் பிரமாணம்** (அறிகருவி) என்பது, பிரத்தியட்சம் (Perception), அனுமானம் (Inference), ஆகமம் (Scripture), அபாவம் (Non-Existence) அருத்தாபத்தி (Presumption), உபமானம் (Analogy), பாரிசேடம் சம்பவம் (Probability) ஐதிகம் (Tradition) சுபாவம், என்னும் பத்து வகைப்படும்.

(2) **பிரமேயம்** (அறிதற்குரிய பொருள்கள்), ஆத்மா சரீரம் இந்திரியம் அர்த்தம் புத்தி மனம் பிரவிருத்தி தோஷம் பிரேத்தியபாவம் பலம் துக்கம் அபவர்க்கம் எனப் பலவகைப்படும்.

(3) **சம்சயம்**, இதுவோ அதுவோ பிறிதோ என்னும் ஐயப்பாடு.

(4) **பிரயோசனம்**, துன்பநீக்கமும் இன்ப ஆக்கமும் ஆகிய பயன்.

(5) **திருட்டாந்தம்**, உதாரணம் அல்லது எடுத்துக்காட்டு.

(6) **சித்தாந்தம்** (Tenet), சான்றுகளால் மெய்ப்பித்து நிறுவப்பெற்ற முடிந்த முடிபான கொள்கைகள். அஃது எல்லோரும் உடன்படுவது, சிலரே உடன்படுவது, மற்றொன்றையும் உடன்படச் செய்வது, குறிப்பிற் பெறப்படுவது என நான்கு வகைப்படும்.

(7) **அவயவம்**, பிரதிஞ்ஞை ஏது திருட்டாந்தம் உபநயம் நிகமனம் என்று ஐந்து வகைப்படும். 'இம்மலை நெருப்புடையது' என்பது பிரதிஞ்ஞை. 'புகையுடைமையால்' என்பது ஏது. 'யாது யாது புகையுடையது அதுவது நெருப்புடையது, அடுக்களை போல, என்பது திருட்டாந்தம். 'இம்மலை புகையுடையது' என்பது உபநயம். 'இம்மலை புகையுடைமையால் நெருப்புடைத்து' என்பது நிகமனம். இவ் ஐந்தனுடன் ஜிஞ்ஞாசம் சம்சயம் சக்ய பிராப்தி பிரயோசனம் சம்சயவியூதாசம் என்னும் ஐந்தையும் சேர்த்துக் கூறுவதும் உண்டு.

(8) **தர்க்கம்** (Confutation) என்பது, பொருளின் உண்மையை அறிவதற்காக உண்மையல்லாத பிறவற்றை ஆராய்ந்து மறுத்தொழித்தல்.

(9) **நிர்ணயம்** (Ascertainment), மாறுபட்டோர் இருதிறத்தினரின் கூற்றுக்களையும் கேட்டு ஐயம் தீர்த்தலும், இருவேறு திறக் கொள்கைகளுள் ஒன்றனை ஏற்று முடிவு செய்தலுமாகும்.

(10) **வாதம்** (Discussion, Debate) என்பது, மாறுபட்ட இருவகைக் கொள்கைகளில் ஒன்றைத் தழுவி நிலைநாட்டிப் பேசுதல்.

(11) **செற்பம்** (Controversy, Polemics), எவ்வகையாலேனும் வெற்றிபெற வேண்டுமென்று விரும்பி, ஒரு கொள்கையினை ஆதரித்தோ எதிர்த்தோ தவறான முறைகளில் வேண்டும் என்றே அழிவழக்குப் பேசுதல்.

*"Of the philosophical schools, it will be sufficient here to remark that the first Nyaya seems analogous to the Peripatetic; the second sometimes called Vaisesika, to the Ionic; the two Mimamsas, of which the second is often distinguished by the name of Vedanta, to the platonic; the first Samkya to the Italic; and the second of Patanjali to the Stoic philosophy; so that Gautama corresponds with Aristotle, Kanada with Thales, Jaimini with Socrates, Vyasa with Plato, Kapila with Pythagoras, and Patanjali with Zeno."

—*Sir William Jones,*

*(12)* **விதண்டை** *(Cavil, Wrangling)*, பிற கொள்கையினை எதிர்த்துரைத்தலை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு, தனக்கென்று ஒரு கொள்கையுமின்றி வீணாகப்பேசி வழக்கிடுதல்.

*(13)* **ஏதுவாபாசம்** *(Fallacy)*, என்பது அசித்தம் (துணியப்படாதது), விருத்தம் (மறுதலைக்கட்படுவது), அனைகாந்திகம் (ஒருதலைப்படாதது) என மூவகைப்பட்டு விரியால் இருபத்தொன்று ஆகும்.

*(14)* **சலம்** *(Equivocation, Quibble)* என்பது, ஒரு கருத்துப் பற்றிக் கூறிய சொல்லுக்கு வேறு பொருள் படைத்துக் கொண்டு பழித்தல். அஃதாவது புதிய கம்பளம் கொண்டுவா என்னும் பொருளில் நவகம்பளம் என்றால், புதிய எனப் பொருள்படும் நவம் என்னும் சொல்லுக்கே, ஒன்பது என்று பொருள்கொண்டு அழிவழக்குப் பேசுதல்.

*(15)* **சாதி** *(Futile objections)* என்பது, உண்மையல்லாத, போலியான தடை விடைகள் நிகழ்த்துதல்; வெறும் ஒப்புமைத் தன்மையினாலோ அல்லது ஒப்பின்மைத் தன்மையினாலோ, ஒரு பொருளை மறுத்து எதிர்த்துப் பயனின்றி வீணே பேசுதல். இது இருபத்து நான்கு வகைப்படும்.

*(16)* **நிக்கிரகத்தானம்** *(Occasion for Reproof)* என்பது, தோல்வித்தானம் எனவும் படும். இது அப்பிரபத்தி (அறியாமை), விப்பிரபத்தி (பிறழ அறிதல்) என இருவகைப்பட்டு விரியால் இருபத்திரண்டு ஆகும். அவையாவன:

1. பிரதிஞ்ஞாஆனி-மேற்கோள் அழிவு.
2. பிரதிஞ்ஞாந்தரம்-வேறுமேற்கோள்
3. பிரதிஞ்ஞாவிரோதம்-மேற்கோள்முரண்
4. பிரதிஞ்ஞாசந்நியாசம்-மேற்கோள் விடல்
5. ஏதுவந்தரம் - வேற்று ஏது
6. அர்த்தாந்தரம் - வேற்றுப்பொருள்
7. நிரர்த்தகம்-பொருளின்மை
8. அவிஞ்ஞாதார்த்தம் - பொருள் அறியப் படாமை
9. அபார்த்தகம் - பொருட் போலி
10. அப்பிராப்த காலம்-காலம் பெறாமை
11. நியூனம் - குன்றக்கூறல்
12. அதிகம்-மிகைபடக் கூறல்
13. புனருக்தம்-கூறியது கூறல்
14. அநநுபாஷணம்-பிற்கூற்றுஇன்மை
15. அஞ்ஞானம்-அறியாமை
16. அப்பிரதிபை-தடுமாற்றம்
17. விட்சேபம்-நழுவுதல்
18. மதாநுஞ்ஞை-பிறன்கூற்றை உடன்படல்
19. பர்யனுயோஜ்யோபேட்சணம் - வினவற்பாலதனை வினவாமை
20. நிர்அநுயோஜ்யாநு யோகம் - வினவற்பாலது அல்லாததனை வினவுதல்
21. அபசித்தாந்தம் - கொள்கைப்போலி
22. ஏதுவாபாசம் - காரணப்போலி.

கௌதமரின் நியாயசூத்திரம் (கி.பி.550), வாத்சாயனரின் நியாய சூத்திர வியாக்கியானம் (கி.பி.450), உத்யோதகாரரின் வார்த்திகம் (கி.பி.600), வாசஸ்பதி மிச்ரரின் தாற்பரிய டீக்கை (கி.பி. 900), உதயனரின் தாத்பரியபரிசுத்தி (கி.பி.1000), சயந்தரின் நியாய மஞ்சரி (கி.பி.1000), பாசர்வக்ஞரின் நியாயசாரம் (கி.பி.1000), கங்கேசரின் தத்துவ சிந்தாமணி (கி.பி.1100), வாசுதேவசார்வபௌமரின் தத்துவசிந்தாமணி (கி.பி.1500), அன்னம்பட்டரின் தருக்கசங்கிரகம் (கி.பி.1700) என்பவைகள், மிகவும் புகழ்சிறந்த நியாயசாத்திரங்கள் ஆகும்.

## (2) வைசேடிகம்

ஒரு பொருளைப் பிறபொருள்களினின்று பிரித்து உணர்த்தும் விசேடத் தன்மைகள் பற்றி ஆராய்ந்து விளக்கும் நூல்கள், வைசேடிகம் எனப்படும். வைசேடிக நூல்கள், திரவியம் குணம் தொழில் சாதி விசேடம் சமவாயம் இன்மை என்னும் எழுவகைப்பதார்த்தங்களைப் பற்றி விளக்கும் .அவற்றுள் திரவியம் என்பது, நிலம் நீர் தீ வளி ஆகாயம் காலம் திசை ஆன்மா மனம் என ஒன்பது வகைப்படும். அவற்றுள் நிலம் நீர் தீ வளி என்னும் நான்கும் அழிகின்ற அநித்தப் பொருள்கள். அவற்றின் காரணங்களாகிய நால்வகைப் பரமாணுக்களும், ஆகாயம் முதலிய ஐந்தும் அழிவற்ற நித்தப் பொருள்கள். இவற்றுள் ஆகாயம் காலம் திசை என்னும் மூன்றும், ஒரோ ஒன்றேயாய், வியாபகமாய் உள்ளன. ஆன்மாக்களாகிய உயிர்கள், வியாபகமாய் எண்ணிறந்தனவாக உள்ளன. மனமானது அணுவளவிற்றாய், ஆன்மாக்கள் தோறும் வெவ்வேறாக இருக்கும். ஆன்மா, பரமான்மா சீவான்மா என இருவகைப்படும். பரமான்மா முற்றுணர்வுடையவன், எல்லாம் வல்லவன், அவன் விருப்பத்தின் வழியாகவே உலகம் தோன்றி ஒடுங்கும். அவனால் செய்யப்பட்டதே வேதம். சீவான்மாக்கள், சிற்றறிவினவாய் வினைக்கு ஈடாகப் பிறந்தும் இறந்தும் இன்பத் துன்பங்களை அனுபவிக்கும். ஆன்மாக்களுக்கு மனத்தோடு கூடாதவழி அறிவு நிகழாது.

இனி குணங்களாவன, திரவியம் பற்றுக் கோடாக நிகழ்பவை. அவை, உருவம் சுவை நாற்றம் ஊறு முதலியனவாக இருபத்துநான்கு வகைப்படும். அவற்றுள் புத்தி இன்பம் துன்பம் விருப்பு வெறுப்பு முயற்சி அறம் பாவம் என்னும் எட்டுக் குணங்களும், பாவனை என்னும் வாதனையும், சீவான்மாக்களுக்குச் சிறப்புக் குணங்களாகும். இவற்றுள், புத்தி விருப்பம் முயற்சி என்னும் மூன்றும் பரமான்மாவுக்குச் சிறப்புக் குணங்கள். பரமான்மாவின் குணங்களாகிய புத்தி விருப்பம் முயற்சி என்பன மூன்றும் அநித்தியம்.

தொழிலாவன, எழும்பல் ஈதல் வளைதல் நிமிர்தல் நடத்தல் என ஐந்து வகைப்படும். சாதி யாவது, பல பொருள்களுக்குப் பொதுவாகிய தன்மை. அது பரம் அபரம் என இருவகைப்படும். விசேடமாவது, ஒவ்வொரு பொரு

ளுக்கே யுரிய சிறப்புத்தன்மை. அவை நிலவணு முதலிய பரமாணுக்களும், ஆகாயம் முதலிய ஐந்தும் ஆகிய நித்தப் பொருள்களும் வேறு பாடு உணர நிற்பனவாய்ப் பலவகைப்படும். சமவாயமாவது, அவயவம் முதலியவற்றிற்கு அவயவி முதலியவற்றோடு நீக்கமின்றி உள்ள தாகிய சம்பந்தம், அஃது ஒன்றே யாகும். இன்மையாவது, முன்னின்மையும், அழிவுபாட் டின்மையும், என்றும் இன்மையும், ஒன்றி னொன்றின்மையும் என நான்கு வகைப்படும்.

இவ்வாறு கூறப்படும் எழுவகைப் பொருள்களின் சிறப்பியல்பு பொதுஇயல்பு வேற்றியல்புகளை உணரவே, உடம்பு முதலிய வற்றின் வேறாகிய ஆன்மாவின் இயல்பு விளங் கும்; விளங்கவே, உடம்பு முதலியவற்றை நான் என்று எண்ணிய மயக்க உணர்வு கழியும்; அது கழியவே முயற்சியின்மையின், அறம் பாவங் கள் இல்லையாய்ப் பிறவி ஒழியும்; பிறவி ஒழி யவே, வரக் கடவனவாகிய துன்பங்கள் இல்லை யாகும். துன்பங்கள் இல்லையாகவே, உடம்பு முகந்துகொண்ட வினைப்பயன் நுகர்ச்சியி னால் கழியும்போது, இறுதித் துன்பங்கட்கு மனத்தோடு கூடுதற்கு ஏது இல்லாமல், அறிவு இன்றிப் பாடாணம் (கல்) போலக் கிடப்பதே முக்தி நிலையாகும் என்பது, வைசேடிக நூற் கொள்கை.

இவ் வைசேடிக நூலைச் செய்தவர் கணாதமுனிவர். இவரைக் காசியபர் என்றும் கூறுவர். கணாதர் என்னும் சொல்லுக்கு 'அணு வை உண்ணுபவர்' என்பது பொருள். பொருள் களையெல்லாம் அணுவினும் மிகச் சிறிய நுண் ணிய நிலையில் ஆராய்ந்து காண முயலுபவர் என்னும் காரணம்பற்றி, இவருக்கு இப்பெயர் வழங்குவதாயிற்று. உலூகர் என்றும் இவருக்கு ஒரு பெயர் வழங்கும். உலூகம் என்னும் ஆந் தையானது பகலில் உறங்கி, இரவில் இரை தேடும். அதுபோல இவர் பகலெல்லாம் தியா னத்தில் கண்மூடி இருந்து, இரவில் உணவு தேடி உண்பர். அதனால் இவருக்கு உலூகர் என்றும், இவர்தம் கொள்கைக்கு உலூகம் என் றும் பெயர்கள் ஏற்பட்டன. இவருடைய காலம் கி.மு. 3-ஆம் நூற்றாண்டு என்பர். பொருள்களின் அமைப்பு, மாறுதல், ஆற்றல் என்பனவற்றைப் பற்றியும், வெம்மை ஒளி ஒலி மின்னாற்றல் காந்தம் என்பவற்றைப் பற்றியும் உரிய ஆராய்ச்சிகளுக்கு, வைசேடிகக் கொள்கை மிகப் பழைய காலத்திலேயே ஒரு முன்னோடி யாகத் திகழ்ந்தது. ஒழுக்க இயல், சமூக இயல், மனஇயல் ஆகியவற்றின் அடிப்படை உண்மை களையும்கூட, ஒருவகையில் வைசேடிக நூல் கள் ஆராய்ந்து விளக்கியுள்ளன.

வைசேடிக நூல்களில் பிராசஸ்தபாதரின் பதார்த்த சங்கிரகம் (கி.பி.4. நூ.), சந்திரரின் தசபதார்த்தசாரம் (கி.பி.648), வியோமசிவ ரின் வியோமவதி, சீதரரின் நியாயகண்டலி (கி.பி.990), உதயனரின் கிரணாவளி (கி.பி. 10.நூ) சீவத்சேசரின் லீலாவதி (கி.பி.11.நூ) சிவாதித்தியரின் சப்தபதார்த்தி, லௌகாட்சி பாஸ்கரரின் தர்க்ககௌமுதி, சங்கரமிச்ரரின் உபாஸ்காரம் (கி.பி.1600), விசுவநாதரின் பாஷாபரிச்சேதம் (கி.பி.16 நூ.), சித்தாந்த முக்தாவளி, ஜகதீசரின் தர்க்காமிருதம் (கி.பி. 1635), ஜயநாராயணரின் விவ்ருத்தி (கி.பி.17 நூ.) என்பவைகள், வைசேடிகக் கொள்கை களை விளக்கும் புகழ்மிக்க பெரு நூல்களாகும்.

## (3) சாங்கியம்

இந்து சமயக் கொள்கைகளுள் மிகவும் பழமையானது சாங்கிய தத்துவமே யாகும். சாங்கியம் என்னும் பெயரானது, எண்ணிக்கை என்னும் பொருளையுடைய 'சங்கியை' என் னும் சொல்லினின்று தோன்றியது என்பர். உல கத்தினையும், உலகத் தோற்றத்திற்குக் காரண மான மூலப் பிரகிருதி, மற்றும் உலகத்தில் வாழும் ஆன்மாக்கள் ஆகிய அனைத்தினையும் ஆராய்ந்து, 25 தத்துவங்களாக எண்ணிக்கை யிட்டு (சங்கியை செய்து) விளக்குவதனால், இதற்குச் சாங்கியம் எனப் பெயரமைந்தது என்று அறிஞர்கள் கூறுவர். மற்றும் சிலர் **சங்கியை** என்பதற்குத் தத்துவச் சிந்தனை (Philosophical reflection) என்பது பொருள் என்றும், உலகத்தின்தோற்றம் நிலை இறுதி என்பவை குறித்த தத்துவச் சிந்தனைகளை ஆராய்ந்து விளக்குவதனால், சாங்கியம் என்று பெயரமைந்தது என்றும் கூறுவதுண்டு. வேறு சிலர் முதன்முதல் இக்கொள்கையைத் தோற்று வித்தவர் **சங்கா** என்பவராதலால், இதற்கு இப் பெயரமைந்தது என்றும் கூறுவர்.

''சாங்கியம் யோகம் என்றிரண்டு தன்மைய
வீங்கிய பொருளெலாம் வேறு காண்பன
ஆங்கவை உணர்ந்தவர்க்கு அன்றி அன்னவன்
ஓங்கிய மேல்நிலை உணரற் பாலதோ''

எனவரும் கம்பர் பாடலில், சாங்கிய தத்துவக் கொள்கையின் சிறப்பு, பெரிதும் புகழ்ந்தோதப் பெற்றிருத்தல் காணலாம். உலக மக்களுக்கு வரும் துன்பங்கள் தம்மைப் பற்றி வருவன, பிற உயிர்களைப் பற்றிவருவன, தெய்வத்தைப் பற்றி வருவன என மூன்று வகைப்படும் என்று பொதுவாக நூல்கள் கூறும். இதனை முதன் முதலில் குறிப்பிட்டது சாங்கியக் கொள்கை யேயாகும். தம்மைப்பற்றி வரும் துன்பங்களை ஆதியான்மிகம் என்றும், பிற உயிர்களைப் பற்றி வரும் துன்பங்களை ஆதிபௌதிகம் என் றும், தெய்வத்தைப்பற்றி வரும் துன்பங்களை ஆதிதைவிகம் என்றும் சாங்கிய நூல்கள் குறிப் பிடும். ''உள்ளது அழியாது இல்லது தோன் றாது'' என்னும் சற்காரிய வாதக் கொள்கை யினை, முதன்முதல் அறிவுறுத்தியது சாங்கிய தத்துவமே யாகும். சத்துவம் இராசதம் தாம தம் என்று குணங்கள் மூன்றுவகைப்படும் என்று விளக்கியதும், சாங்கியக் கொள்கையேயாகும்.

சாங்கிய மதம், உலகத்தினைப் பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் பூதங்கள் ஐந்து, சப்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்து, வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் என்னும் கன்மேந்திரியங்கள் ஐந்து, சுரோத்திரம் துவக்கு சட்சு ஆக்கிராணம் சிங்குவை என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்து என்பவற்றுடன், மனம் புத்தி அகங்காரம்

மூலப்பிரகிருதி புருடன் என்னும் 25 தத்துவங்களை ஆராய்ந்து விளக்குகின்றது, புருடன் 25-ஆம் தத்துவம். பிரகிருதி 24-ஆம் தத்துவம். பிருதிவி முதல் புத்தி ஈறாக உள்ள இருபத்து மூன்று தத்துவங்களும் தோன்றுவதற்கு மூல காரணம் ஆதலின், பிரகிருதி மூலப்பிரகிருதி என வழங்கப்பெறும். மூலப் பிரகிருதி, நித்தமாய்-வியாபகமாய் - சடமாய் - எல்லாப் பொருள்களுக்கும் காரணமாய்ச் - சத்துவம் இராசதம் தாமதம் என்னும் முக்குணங்களும் சமமாக நின்ற நிலையாய்-அருவமாய் உள்ளது. இத் தத்துவங்கள் இருபத்திநான்கிற்கும் வேறாய், நித்தமாய் - வியாபகமாய் - அருவாய் -பலவாய் - அறிவதும் செய்வதுமின்றி அறிவு மாத்திரமாய் - ஒன்றற்குக் காரணமாதலும் ஒன்றின் காரியமாதலும் இன்றி நிற்கும் ஆன்மாக்கள் (புருடன்), பெத்த நிலையிலும் முத்தி நிலையிலும் ஒரு தன்மையாய் இருக்கும். புருடனுக்கு மலினம் என்பது இல்லை. தாமரை இலை நீர்போல் எதிலும் ஒட்டுதலின்றி நிற்பது புருடனின் இயல்பு. அஃது அநாதியே புத்தியைச் சார்ந்த அவிச்சை வயத்தால், பெத்தம் எனப்படும் இன்ப துன்ப உணர்வுகளை அடைந்து நின்றது. புத்தியாவது, மூலப் பிரகிருதியின் பரிணாமம். அதுவே மான் என்றும், அந்தக் கரணம் என்றும் கூறப்படும். அப் புத்தி, பொறி ஞானமாய்ப் பரிணமித்து விடயத்தில் செல்லும். புருடன் செய்வான் என்றும், புத்தி அறியும் என்றும் சொல்லப்படுவது வேற்றுமை உணராததனால் ஆகும். மூலப் பிரகிருதியையும், புருடனையும் தனித்தனியானவை என்று பகுத்துணர்ந்தால், அவிச்சை நீங்கும். அந்நிலையே முத்தி எனப்படும்.

சாங்கியக் கொள்கையை நிறுவியவர் கபிலர் என்பவர். அவரது காலம் கி.மு.6-ஆம் நூற்றாண்டு என்பர். இவருடைய தந்தையின் பெயர் கர்த்தமர் என்றும், தாயின் பெயர் தேவஆகுதி என்றும் கூறுவர். இலங்கையில் அனுராதபுரத்துக் குகைக்கோயிலில், இவரது திருவுருவம் செதுக்கப்பெற்றுள்ளது. கல்கத்தா நகரத்துக்கு 90 கல் தொலைவில் கங்கையாற்றின் முகப்பில் உள்ள சாகரம் என்னும் தீவில் இவர் சிலகாலம் வாழ்ந்தனர் என்பர். நேபாள தேசத்தில் உள்ள கபிலவாஸ்து என்னும் நகரம் இவர் பெயராலேயே அமைந்தது என்றும், இந் நகரத்தில்தான் புத்தர்பிரான் தோன்றினார் என்றும் கூறுவர். இதனால் பௌத்தமதம் தோன்றுதற்கு முன்னரே கபிலரின் சாங்கியக் கொள்கை பழமை வாய்ந்ததாகத் தோன்றிப் பரவி இருந்தது என்பது புலனாகின்றது. சங்க காலத்திலும் தமிழகத்தில் கபிலர் என்னும் பெயரில் சில புலவர்கள் இருந்தனர். அதனால் இவர்தம் பெருமையும் சிறப்பும் பெரிதும் விளங்குகின்றன.

(தொடரும்)

# இலங்கையரசில் இந்து சமய - கலாச்சாரத் துறை அமைச்சர் நியமனம்

இலங்கையில் இந்து சமயக் கலாச்சார அமைச்சராகப் பதவியேற்றுள்ள மாண்புமிகு திரு. செல்லையா இராசதுரை அவர்கள், அண்மையில் நம் தமிழகத்திற்கு வருகை தந்தபோது, அவர்களைச் சந்தித்துப் பேசும் வாய்ப்புப் பெற்றேன்.

இலங்கையில் பிரதேச அபிவிருத்தி, தமிழ் மொழி அமுலாக்கம், இந்து சமயம், இந்து கலாச்சாரம் ஆகிய துறைகளை நிர்வகிக்கும் அரசாங்க அமைச்சராக, மாண்புமிகு திரு செல்லையா இராசதுரை அவர்கள், இலங்கையின் அதிஉத்தம ஜனாதிபதி **திரு ஜே. ஆர். ஜெயவர்த்தனா** அவர்களால், அண்மையில் நியமிக்கப்பட்டிருப்பது, தமிழக மக்கள் அனைவரும் அறிந்து பாராட்டி மகிழ்தற்குரிய நற்செய்தியாகும். இலங்கையில் இதுபோன்ற ஓர் அமைச்சு, அதன் அரசாங்கத்தால் இப்போதுதான், முதல் தடவையாக உருவாக்கப்பட்டிருக்கின்றது. இது பொதுவாக இந்து சமயத்தைச் சார்ந்த மக்கள் அனைவராலும், சிறப்பாக நம் தமிழ்மக்கள் அனைவராலும், பெரிதும் போற்றிப் புகழ்ந்து வரவேற்கப்படவேண்டிய சிறப்புமிக்க செயலாகும். இங்ஙனம் ஓர் இந்து சமய -கலாச்சார அமைச்சினை ஏற்படுத்தியதற்காக, இலங்கையின் அதிஉத்தம ஜனாதிபதி **திரு ஜே. ஆர். ஜெயவர்த்தனா** அவர்களுக்குத் தமிழ்கூறும் நல்லுலகம் மனமார்ந்த நன்றியுணர்வையும், வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றது.

அறிஞர் பெருமக்கள் பலருடன் தொடர்பு கொண்டும், கலந்து பேசியும், தமிழ்மொழி வளர்ச்சிக்கும், இந்து சமயக் கலாச்சார வளர்ச்சிக்கும், தம்மால் இயன்ற எல்லாப் பணிகளையும் செய்வதற்கு, முழுமூச்சாகவும், மிகத்தீவிரமாகவும், அளவற்ற ஆர்வத்துடனும், மிக நல்லமுறையில் திட்டமிட்டு ஆக்கப் பணிகள் புரிவதில், மாண்புமிகு **திரு செல்லையா இராசதுரை** அவர்கள், முனைந்து முயன்று வருகின்றார்கள்.

காட்சிக்கு எளியராய், கனிவுமிக்க இனிய நயவுரையினராய், தமிழ்ப் பண்பாடுகள் நிறைந்து செறிந்த நற்பெரும் சான்றோராய் விளங்கும், மாண்புமிகு திரு. செல்லையா இராசதுரை அவர்கள், இந்து சமயக் கலாச்சார அமைச்சராக விளங்கித் திறம்படச் செயலாற்றுவதற்குரிய, எல்லா நலன்களும் இனிதமைந்து திகழ்தல், நமக்கெல்லாம் மேலும் மிக்க பெருமகிழ்ச்சியை விளைவிக்கின்றது. செந்தமிழ் நலஞ்சான்ற இப் பெருந்தகையாளர் மூலம், இலங்கையில் இந்து சமயமும், தமிழ் மொழியும் சிறப்புற வளர்ந்து செழித்தோங்கித் திகழும் என்று நாம் பெரிதும் நம்பலாம்!

அகில உலக இந்து சமய மாநாடு ஒன்றை அடுத்த ஆண்டு இலங்கையில் நடத்தவும், இலங்கையில் இந்து சமய வரலாற்றுப் பின்னணியைக் கொண்ட கலைக்களஞ்சியம் ஒன்றை வெளியிடவும், அமைச்சர் **திரு செல்லையா இராசதுரை** அவர்கள் சிறப்புறத் திட்டமிட்டுச் சிறந்த முயற்சிகளை மேற்கொண்டுள்ளார்கள் என்பது அறிந்து, நாம் பெரிதும் மகிழ்கின்றோம். அமைச்சர் அவர்களின் திட்டங்களும் முயற்சிகளும் சிறந்த முறையில் நிறைவேறி, நிறைந்த பயன்களை விளைவித்து வெற்றிபெற, எல்லாம் வல்ல இறைவனின் திருவருளை வணங்கி வாழ்த்துவோமாக!

—ஆசிரியர்.

திருமுறைகளிற் பயின்றுள்ள

# திருத்தலங்களும், இறைவன்-இறைவி திருப்பெயர்களும்

| வ.எண் | தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவிபெயர் |
|---|---|---|---|
| 1. | திருஅகத்தியான்பள்ளி | அகத்தீசுவரர் | பாகம்பிரியாள் |
| 2. | திருஅச்சிறுபாக்கம் | ஆட்சிகொண்டார் | இளங்கிளைநாயகி |
| 3. | திருவஞ்சைக்களம் | அஞ்சைக்களத்தப்பர் | உமையம்மை |
| 4. | திருவண்ணாமலை | அண்ணாமலையண்ணல் | உண்ணாமுலையம்மை |
| 5. | திருவதிகை | வீரட்டேசுவரர் | திரிபுரசுந்தரி |
| 6. | திருஅம்பர்ப்பெருந்திருக்கோயில் | பிரமபுரீசுவரர் | பூங்குழலம்மை |
| 7. | திருஅம்பர்மாகாளம் | மாகாளநாதர் | அச்சம்தீர்க்கும்அம்மை |
| 8. | திருஅரசிலி (ஒழிந்தியாப்பட்டு) | அரசிலிநாதர் | பெரியநாயகி |
| 9. | திருஅரதைப்பெரும்பாழி (அரித்துவாரமங்கலம்) | பாதாளேசுரர் | அழகம்மை |
| 10. | திருஅரிசிற்கரைப்புத்தூர் (அழகார்புத்தூர்) | படிக்காசுஅளித்தபரமர் | அழகாம்பிகை |
| 11. | திருஅவளிவணல்லூர் | சாட்சிநாதர் | அழகம்மை |
| 12. | திருஅவிநாசி | அவிநாசியப்பர் | கருணாம்பிகை |
| 13. | திருவழுந்தூர் | வேதபுரீசுரர் | சுந்தராம்பிகை |
| 14. | திருஅறையணிநல்லூர் | அறையணிநாதேசுவரர் | அருள்நாயகி |
| 15. | திருஅனேகதங்காபதம் | அருண்மன்னேசுவரர் | மனோன்மணியம்மை |
| 16. | திருஅன்பிலாலந்துறை | ஆலந்துறைநாதர் | சுந்தரநாயகி |
| 17. | திருவன்னியூர் | இடர்த்துணைநாதர் | பெரியநாயகியம்மை |
| 18. | திருஆக்கூர் | தான்தோன்றியப்பர் | வாள்நெடுங்கண்ணியம்மை |
| 19. | திருவாடானை | ஆடானைநாதர் | அன்புஅம்மை |
| 20. | திருவாப்பனூர் | திருவாப்புடையார் | குரவங்கமழ் குழலி |
| 21. | திருவாப்பாடி | பாலுகந்தபரமர் | பெரியநாயகியம்மை |
| 22. | திருவாமாத்தூர் | அபிராமேசுவரர் | முத்தாம்பிகையம்மை |
| 23. | திருவாரூர் | புற்றிடங்கொண்டார் (வீதிவிடங்கர்) | அல்லியங்கோதை |

| வ. எண் | தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|---|
| 24. | திருவாரூர்அரநெறி | அரநெறியப்பர் | வண்டார்குழலி |
| 25. | திருவாரூர்ப்பரவையுண்மண்டளி | தூவாய்நாதர் | பஞ்சின்மெல்லடியம்மை |
| 26. | திருவாலங்காடு | தேவர்சிங்கப்பெருமான் | வண்டார்குழலியம்மை |
| 27. | திருவாலம்பொழில் | ஆலம்பொழில்அப்பர் | ஞானாம்பிகை |
| 28. | திருவாலவாய் (மதுரை) | சொக்கநாதர் | மீனாட்சியம்மை |
| 29. | திருவாவடுதுறை | மாசிலாமணிஈசுவரர் | ஒப்பிலாமுலையம்மை |
| 30. | திருஆவூர் | பசுபதீசுவரர் | மங்களநாயகி. |
| 31. | திருவானைக்கா | ஆனைக்கா அண்ணல் | அகிலாண்டநாயகி |
| 32. | திருஇடும்பாவனம் | இடும்பாவனத்திறைவர் | மங்களநாயகி |
| 33. | திருஇடைச்சுரம் | இடைச்சுரநாதர் | இமயமடக்கொடியம்மை |
| 34. | திருவிடைமருதூர் | மகாலிங்கேசுவரர்<br>ஏகநாயகர் | பெருநலமாமுலைநாயகி |
| 35. | திருஇடையாறு | இடையாற்றீசுரர் | சிற்றிடைநாயகி. |
| 36. | திருஇந்திநீலபருப்பதம் | நீலமலைநாதர் | நீலாம்பிகை. |
| 37. | திருஇராமனதீச்சுரம் | இராமநாதேசுவரர் | கருவார்குழலியம்மை |
| 38. | திருஇராமேச்சுரம் | இராமநாதர் | மலைவளர்காதலியம்மை |
| 39. | திருஇரும்பூளை (ஆலங்குடி) | காசிவனநாதர் | ஏலவார்குழலியம்மை |
| 40. | திருஇரும்பைமாகாளம் | மாகாளேசுவரர் | குயில்மொழியம்மை |
| 41. | திருஇலம்பையங்கோட்டூர் | சந்திரசேகரர் | கோடேந்துமுலையம்மை |
| 42. | திருஇன்னம்பர் | எழுத்தறிநாதர் | கொந்தார் பூங்குழலி |
| 43. | திருஈங்கோய்மலை | ஈங்கோய்மலைஈசர் | மரகதவல்லியம்மை |
| 44. | திருஉசாத்தானம் (கோயிலூர்) | உசாத்தானப்பெருமான் | பெரியநாயகியம்மை |
| 45. | திருவூறல் (தக்கோலம்) | உமாபதீசுவரர் | உமையம்மை |
| 46. | திருஎதிர்கொள்பாடி | ஐராவதேசுவரர் | மலர்க்குழல் மாதம்மை |
| 47. | திருஎருக்கத்தம்புலியூர்<br>(இராசேந்திரபட்டினம்) | நீலகண்டஈசுவரர் | நீலமலர்க்கண்ணம்மை |
| 48. | திருஎறும்பியூர் | எறும்பீசுவரர் | நறுங்குழல்நாயகி |
| 49. | திருவேடகம் | ஏடகநாதர் | ஏலவார்குழலி |
| 50. | திருவையாறு | ஐயாறப்பர் | அறம்வளர்த்தசெல்வி |
| 51. | திருவொற்றியூர் | எழுத்தறியும்பெருமான் | வடிவுடையம்மை |
| 52. | திருவோணகாந்தன்தளி<br>(காஞ்சிபுரம்) | ஓணகாந்தஈசர் | காமாட்சியம்மை |
| 53. | திருவோத்தூர் | வேதநாதர் | இளமுலைநாயகி |
| 54. | திருஓமாம்புலியூர் | துயர்தீர்த்தநாதர் | பூங்கொடிநாயகி |

(தொடர்ச்சி 42-ஆம் பக்கம் பார்க்கவும்)

# திருக்குறளும் வைணவ சமயத்து உறுதிப் பொருள்களும்

"பேராசிரியர்"

திரு டாக்டர் ந. சுப்புரெட்டியார், M. A., Ph. D.

திருக்குறள் ஒரு பொதுமறை. இந்நூல் நன்னூலென எல்லா நாட்டவரும், எல்லாச் சமயத்தினரும், எல்லாச் சாதியினரும் ஒருமுகமாக ஒப்புக் கொள்ளப்பெற்றது; தான் தோன்றிய காலத்திற்கு மட்டுமன்றிக் காலந்தோறும் தோன்றும் மக்கள் தேவைக்கேற்பப் புதுப்புதுப் பொருளை தோற்றுவிக்கக் கூடிய ஒரு சிறந்த நூல். இது கருதியே இறையனார் என்ற சங்கப்புலவரும் 'என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும், நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்' 1 இருப்பதாகக் கூறிப்போந்தார். இந்நூற் கருத்துக்கள் தமிழ் உரையாசிரியர்களே யன்றி மணிப்பிரவாள நடையில் எழுதிய நாலாயிரத்தின் உரையாசிரியர்களாலும் மேற்கோள்களாக எடுத்தாளப் பெற்றுள்ளன. இதன் பெருமை கருதியே உலகிலுள்ள பல்வேறு மொழிகளிலும் இது மொழி பெயர்க்கப் பெற்றுள்ளது. இதனைப்போல் அதிகமான மொழிகளில் பெயர்க்கப்பெற்ற வேறு ஒரு நூல் உலகில் எம்மொழியிலும் இல்லையென்றே உறுதியாகக் கூறலாம். இந்தச் சிறந்த நூலை நம் தமிழகம் உலகிற்கு ஈந்து வான்புகழ் பெற்றது என்று நம் தேசிய கவி பாரதியாரும் புகழ்ந்துள்ளதை நாமறிவோம். இங்ஙனம் ஒப்புயர்வற்ற ஒரு பெரு நூலில் வைணவ சமயத்து உறுதிப் பொருள்கள் இருக்குமாற்றை எடுத்துக்காட்டுவதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

**வைணவ தத்துவம் :**

வைணவத்தின் உறுதிப் பொருள்களாகப் பேசப்பெறுபவை மூன்று. அவை: சித்து, அசித்து, ஈசுவரன் என்று வழங்கப்பெறுகின்றன. சித்து என்பது உயிர்களின் தொகுதி. அசித்து என்பது, மக்கள் விலங்கு முதலியனவற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதி. பிரகிருதியை மூலப்பகுதி என்பர். ஈசுவரன் என்பது இறைவன். இவை மூன்றும் "தத்துவத்திரயம்" (திரயம்-மூன்று) என்ற பெயரால் வழங்கி வருகின்றன. இவை மூன்றும் தனித்தனி இயல்புடைய வேறுவேறு பொருள்கள்; என்றும் அழிவில்லாதவை; ஆயினும், எக்காலத்தும் இவை மூன்றும் ஒன்றாக இணைந்தே இருக்கின்றன. இவற்றுள் இறைவன், சித்து அசித்து என்ற இரண்டனுள்ளும் அந்தர்யாமியாக உள்ளான். இதுவே இவற்றின் நுண்ணிய நிலை (சூக்கும நிலை). மூலப்பகுதி விரிவடைந்து மக்கள், விலங்கு முதலியவற்றின் உடம்புகளாகவும், மற்றுமுள்ள பொருள்களாகவும் ஆகின்றது. உயிர் தன்னுடைய புண்ணிய பாவங்கட்கேற்ப ஒவ்வோருடம்பை அடைகின்றது. அதுவே உயிருக்குப் பிறப்பாகும். இறைவன் மூலப் பகுதியின் விகாரமாகிய எல்லாப் பொருள்களுள்ளும் எல்லா உயிர்களுள்ளும் அந்தர்யாமியாக மறைந்துள்ளான். இதுவே இவற்றின் பருநிலை (ஸ்தூல நிலை) இதனைத் தொல்காப்பியர்,

"நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின் 2

எனச் சுட்டுவர். இது தத்துவங்கள் மூன்றும் ஒன்றோடொன்று இயைந்த நிலையைக் காட்டுகின்றது. நம்மாழ்வாரும்,

திடவிசும்பு எரிவளி நீர்நிலம்இவைமிசைப்
படர்பொருள் முழுவதும் ஆய்அவை அவைதொறும்
உடல்மிசை உயிர்எனக் கரந்தெங்கும் பரந்துளன் 3

என்று இதனை விளக்குவர். உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் ஐந்து பூதங்களின் கூட்டுறவால் உண்டாவதை,

அலங்கலில் தோன்றும் பொய்ம்மை
அரவுஎனப் பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின்
வேறுபாடு உற்ற வீக்கம் 4

என்று கம்பநாடனும் விளக்குவன். மேற்குறிப்பிட்ட ஆழ்வார் பாசுரத்தில் 'இவை மிசைப் படர்பொருள் முழுவதும் ஆய்' என்பதில் 'ஆக்கி' என்னாது 'ஆகி' என்றது 'இறைவனே எல்லாப் பொருள்களாகவும் விரிந்துள்ளான்' என்பதை வற்புறுத்தும் பொருட்டு, "அனைத்தும்நீ அனைத்துட் பொருளும்நீ" 5 என்ற பரிபாடலின் அடியும் இதனை உணர்த்தும். 'அவை அவை தொறும் கரந்து எங்கும் பரந்துளன்'. அங்ஙனம் உண்டாக்கப்பெற்ற ஒவ்வொரு பொருளிலும் அந்தர்யாமியாக மறைந்து நின்றும், அவை எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி எங்கும் வியாபித்தும் உளன். இந்த இரு தன்மைகளையும் 'அந்தர்யாமித்துவம்' 'வியாபகத்துவம்' என்று மெய்ப்பொருள் நூலார் நுவல்வர். இந்த இரண்டையும் ஆழ்வார்,

அறிகிலேன் - தன்னுள் அனைத்துலகும் நிற்க
நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும்பிரான்6

என்று பிறிதோர் இடத்திலும் விளக்குவர். 'தன்னுள் அனைத்துலகும் நிற்க' என்றது வியாபகத் தன்மையை. 'தானும் அவற்றுள் நிற்கும் பிரான்' என்றது அந்தர்யாமிய நிலையை. இங்ஙனம் இறைவன் பொருள்களினுள் மறைந்து உறைவது எதுபோல எனின் 'உடல்மிசை உயிர் எனக் கரந்துளன்' - உடலினுள் உயிர் எவ்வாறு உளதோ அவ்வாறு அவ்வுயிர் உட்பட எல்லாப் பொருள்களினுள்ளும் இறைவன் உள்ளான். இதனை வைணவம் 'சரீர - சரீரி பாவனை' என்று உரைக்கும்.

இன்னோர் உண்மையும் ஈண்டு நினைவு கூர்தற்பாலது. மூலப்பகுதியின் விகாரமாகிய உடம்பிற்கு வளர்தல், பருத்தல், குறைதல் முதலிய விகாரங்கள் உண்டு. அவ்வுடம்பினுள் இருக்கும் உயிருக்கு அத்தகைய விகாரம் ஒன்றுமில்லை. ஆயினும், தான் செய்த புண்ணிய பாவங்கட்கேற்ப உடம்பைப் பெற்றிருப்பதால் அவ்வுடம்பைப் பற்றிய இன்ப துன்ப உணர்ச்சிகள் உயிருக்கு உண்டு. இவ்வுடம்பினுள்ளும் உயிரினுள்ளும் அந்தர்யாமியாக உள்ள இறைவன் உடம்பினுடைய விகாரங்களையும், உயிரினுடைய இன்ப துன்ப உணர்ச்சிகளையும் அடைவதில்லை. இறைவன் வினை காரணமாக இல்லாமல் தன் விருப்பினால் இவ்விரண்டனுள்ளும் அமைந்திருத்தலால் அவ்விரண்டின் தன்மைகளையும் அவன் அடைவதில்லை. உயிர் மூலப்பகுதியின் விகாரமாகிய உடம்பைத் தனக்கு உடம்பாகக் கொண்டிருத்தல் போல, இறைவன் உடம்பு, உயிர் ஆகிய இரண்டையும் தனக்கு உடம்பாகக் கொண்டிருக்கின்றான். இவ்வாறு இம் மூன்று தத்துவங்களும் ஒன்றை விட்டு ஒன்று பிரியாமல் எக்காலத்தும், தத்தம் இயல்பை விடாமல் ஒன்று சேர்ந்துள்ளன என்பது வைணவ சமயக் கொள்கையாகும். இக் கொள்கையை விளக்க வைணவ சமயத் துறவிகள் மூன்று கோல்களை ஒன்றாகப் பிணைத்துக் கையில் ஏந்தியுள்ளனர் என்பதும் சிந்திக்கத் தக்கது.

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய 7

எனத் தொல்காப்பியரும் அந்தணர்க்கு முக்கோல் கூறினர். மேற்கூறிய மூன்று உறுதிப் பொருள்களையும் வேறு இரண்டு பொருள்களையும் சேர்த்துக் கூறுகின்றது திருவாய்மொழித் தனியன்.

*மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்*
*தக்க நெறியும் தடையாகித்-தொக்கியலும்*
*ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர் கோன்*
*யாழினிசை வேதத் தியல்*

இங்கு இறைநிலை-இறைவன் சொரூபம்; மெய்யாம் உயிர்நிலை-இறைவனைப் போன்றே நித்தியமான ஆன்ம சொரூபம்; தக்கநெறி-இறைவனை அடையும் உபாயத்தின் சொரூபம் (சரணாகதி); தடை-இறைவனை அடையத் தடையாக உள்ள விரோதி சொரூபம் (அதாவது முன்னைய வினைகள்); வாழ்வினை -வாழ்வாகிய புருஷார்த்தம். இவை ஐந்தும் 'அர்த்த பஞ்சகம்' என வழங்கப்பெறும்.

### திருக்குறளில் இக்கருத்துக்கள் :

இங்குக் குறிப்பிட்ட வைணவ சமயத்தின் உறுதிப்பொருள்கள், திருக்குறளில் உள்ளனவா என்பதை ஆராய்வதே இந்தக் கட்டுரையின் நோக்கமாகும். திருக்குறட் பாக்களை எல்லாம் ஆழ்ந்து கற்கும்போது இறைவனைப் பற்றி அதிகமாகவும், ஏனைய தத்துவங்கள் ஓரோ வழியும் கூறப்பெற்றிருப்பதை அறியலாம்.

### ஈசுவரன் :

வைணவ தத்துவத்தில் ஒன்றாகிய 'ஈசுவரன்' என்ற உண்மைப்பொருள் திருக்குறளில் 'கடவுள் வாழ்த்து' என்ற பகுதியிலும் வேறு சில இடங்களிலும் தெளிவாகக் குறிப்பிடப் பெறுகின்றது. இதனைக் காண்போம்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு8

இந்தக் குறளில் 'ஆதிபகவன் - முதற்கடவுள்'. பரிமேலழகர் 'ஆதிபகவன்' என்னும் இருபெயரொட்டுப் பண்புத் தொகையை வடநூல் முடிவாக்குவர். ஆதிபகவன் என்பது வடமொழிப் புணர்ச்சியாதலால் வலி மிகவில்லை. பகவன் என்பது பகவாந் என்னும் வடமொழியின் விகாரம். பகவான் என்ற சொல்லில் ஞானம் சக்தி பலம் ஐசுவரியம் வீரியம் தேஜஸ் என்ற ஆறு குணங்களுக்கும் 'பகம்' என்பது பெயர். ஆதலால் 'பகவான்' இந்த ஆறு குணங்களையும் உடையவன் என்பது பொருள். வைணவ சமயக் கருத்துப்படி ஈசுவரன் இந்த ஆறு குணங்களை உடையவன். பகவான் சொன்ன கீதை பகவற் கீதை, பகவான் புகழைக் கூறும் நூல் பாகவதம், பகவான் அடியார் பாகவதர் என வழங்குதலால் 'பகவான்' என்ற சொல் திருமாலையே குறிக்கும் என்பதை அறிதல் வேண்டும். நம்மாழ்வாரும் ''அந்தமில் ஆதியம் பகவன்'' 9 என்று கூறுதல் காண்க. அடுத்த குறளில் 'வாலறிவன்' 10 என்ற தொடருக்கு 'மெய்யறிவினையுடையவன்' 'எல்லாப் பொருளையும் அறியும் தூய அறிவினையுடையவன்' என்பது பொருள். ''அடலாழி கொண்ட அறிவன்'' என்று அருளிச் செய்திருத்தலால் 'அறிவன்' என்பதற்குத் திருமால் என்று கொள்வதற்குத் தட்டில்லை. அடுத்த குறளில் 'மலர் மிசை ஏகினான்' 12 என்பதில் 'மலர்' என்பது தாமரையைக் குறிக்கும். எல்லா மலரினும் தாமரை சிறத்தல் பற்றி 'மலர்' எனப்பட்டது. 'பூவெனப்படுவது பொறிவாழ் பூவே' என்பது காண்க. ஈண்டுப் பொறி என்பது இலக்குமி. நம்மாழ்வாரும்,

மன்னகம் மலம்அற மலர்மிசை எழுதரும்
மன்னுணர்வு அளவுஇலன்13

என்று அருளிச் செய்திருப்பது காண்க. இறைவனை ''வேண்டுதல் வேண்டாமை இலான்''14

என்று குறிப்பிடுவர் வள்ளுவப் பெருந்தகை. 'ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன்' என்பது இதன் பொருள். அப்படிப்பட்டவன் இறைவன். நம்மாழ்வார்.

> கொள்கை கொளாமை இலாதான்
> எள்கல் இராகம் இலாதான்15

என்று இறைவனைக் காட்டுவர். கொள்கை கொளாமை இலாதான்-குணம் பார்த்துக் கொள்ளுதலும், குணம் இல்லாமை பார்த்துத் தள்ளுதலும் இல்லாதவன்; எள்கல் இராகம் இலாதான் - கைவிடுகைக்குக் காரணமான வெறுப்பும், கைக்கொள்ளுகைக்குக் காரணமான விருப்பும் இல்லாதவன். எள்கல்-இகழ்தல்; இராகம்-ஆசை. இதனால் 'வேண்டுதல் வேண்டாமை இலான்' திருமால் என்று கொள்ளுதற்குத் தடை இல்லை. ஐந்தாவது குறள்,

> இருள்சேர் இருவினையும் சேரா; இறைவன்
> பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு16

என்பது. ஈண்டுக் கடவுளை 'இறைவன்' என்று சொல்லால் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். 'இறைவன்' என்பதற்கு எப்பொருளினும் தங்குகின்றவன் எனப்பொருள் கூறுவர் சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார். இது 'இறு' என்னும் பகுதியின் அடியாகப் பிறந்த வினையாலணையும் பெயர். இறை என்பது உயர்திணை இயற்பெயர் என்றும், அது ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நின்று, வருமொழி வந்தபின்பு இறைவன் வந்தான், இறைவர் வந்தார் என நிற்கும் என்றும் கூறுவர், இலக்கணக்கொத்து நூலுடையார். இச்சொல் சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய பண்டைய இலக்கியங்களிலும் அவற்றின் உரைகளிலும் கடவுளர்க்கும் அரசர்க்கும் பெயராக வழங்கப்பட்டுள்ளது. பரிமேலழகரும் ''இந்திரன் முதலிய இறையவர் பதங்களும்'' எனத் திருக்குறள் உரைப்பாயிரத்தில் இந்திரன் முதலான தேவர்களனைவரையும் 'இறைவர்' என்ற சொல்லால் வழங்குவர். தெய்வப் புலமைத் திருவள்ளுவரும் 'இறைவன் யாவன்'? என்ற வினாவிற்கு விடையாக முறைசெய்து காப்பாற்றுகின்றவனே இறைவன் ஆவான் என்றும், அவ்விறைவன் அம்முறை செய்து காப்பாற்றுதலை அரசர்கள் மூலமாகவும் செய்கின்றானாதலின் அவ்வரசர்களும் தொழிலுரிமை பற்றி 'இறைவன்' என்ற பெயரால் வழங்கப் பெறுவர் என்றும் கூறுவர்.

> முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு
> இறையென்று வைக்கப் படும்17

என்ற திருக்குறளையும், ''தான் முறைசெய்து பிறர் நலியாமல் காத்தலையும் செய்யும் அரசன் பிறப்பால் மகனேயாயினும் செயலான் மக்கட்குக் கடவுள் என்று வேறு வைக்கப்படும்' என்ற பரிமேலழகர் உரையினையும் காண்க.

ஈண்டுத் திருவள்ளுவ நாயனார்' முறை செய்து காப்பாற்றுபவன் யாவன்? அவன் இறை என்று சொல்லப்படுவான் என்பார், அதனை விதிமுகத்தாற் கூறாது உடம்படுபுணர்தல் என்னும் உத்திவகையால் 'முறை செய்து காப்பாற்றும் இறை' என்றும், முறை செய்து காப்பாற்றும் தொழில் உரிமையான் அம்மன்னனும் இறை என்று சொல்லப்படுவான் என்பார் 'முறை செய்து காப்பாற்றும் மன்னவன் இறை என்று வைக்கப்படும்' என்றும், மன்னனை இறை என்று கூறிய அதனால், அவ்விறைவன் 'மூவேழுலகுக்கும் நாதன்' ஆதலைப் போன்று இம் மன்னனும் மூவேழுலகுக்கும் நாதன் ஆவனோ என்ற ஐயத்தை நீக்குதற்கு இவ்வுலகிலுள்ள மக்கட்கு மாத்திரமே நாதன் என்பார் 'மக்கட்கு இறை என்று' என்றும், பாதுகாக்கும் தொழிலுரிமையான் இறையாவான் அன்றி இயற்கையில் இறையல்லன் என்பார் 'வைக்கப்படும்' என்றும் கூறினார். 'செயலான் மக்கட்குக் கடவுள் என்று வேறு வைக்கப்படும்' என்ற பரிமேலழகரின் உரைப் பகுதியும் ஈண்டுச் சிந்திக்கற்பாலது.

ஆயின், இறைவன் என்பதற்கு எல்லாப் பொருள்களினும் தங்குகின்றவன் என்ற பொருளை ஈண்டுத் திருவள்ளுவர் கூறிற்றிலரே எனின்; 'காப்பாற்றும்' என்ற சொல்லின் பொருளால் அதனையும் பெறவைத்தார் என்க. எவ்வாறெனின்: காப்பாற்றுதல் என்பது ஒவ்வோர் உயிர்க்கும் விருப்பில்லனவற்றை நீக்கி விருப்புள்ளனவற்றைக் கொடுத்தல் என்பர் பெரியோர். ஒவ்வோருயிரும் விரும்புகின்றவற்றைக் கொடுக்க வேண்டுமாயின், அவ்வுயிர்களிடத்தில் தான் தங்கியிருந்தாலன்றி அவற்றின் விருப்பத்தை அறிதலும் அறிந்து கொடுத்தலும் முடியாவாம். ஆதலின் காப்பாற்றுதலாகிய காரியத்தினைக் கூறிய அளவில் அவ்வுயிர்தோறும் தங்கியிருத்தலாகிய காரணமும் தானே பெறப்படுதலின், அதனையும் கூறினாரேயாவர். 'யாண்டும், என்றும், காரணம் இன்றேல் காரியமும் இன்று' என்க. ஆக எல்லாப் பொருளினும் தங்கியிருக்கின்றவனே காத்தலாகிய தொழிலைச் செய்ய முடியும் என்பதும், காப்பாற்றுகின்றவன் எல்லாப் பொருளிலும் தங்கியிருத்தல் வேண்டும் என்பதும் பெறப்படுதலின், இவ்விரண்டும் ஒன்றோடொன்று பிரிவின்றி ஒற்றுமைப்பட்டிருத்தல் காண்க. 18. இவற்றால் வைணவ தத்துவமாகிய 'அந்தர்யாமித்துவம்' பெறப்படுதலின் 'இறைவன்' என்பதற்குத் 'திருமால்' என்ற பொருளை உறுதியாகக் கொள்ளலாம்.

ஆறாவது குறளில் கடவுளைப் ''பொறிவாயில் ஐந்தவித்தான்''19 என்று குறிப்பிடுவர் ஆசிரியர். ஐந்து அவித்தான்-ஐந்து அவாவினையும் அறுத்தவன். அவன் இறைவன். அவன் காட்டிய நெறி 'பொய்தீர் ஒழுக்க நெறி'. அதாவது மெய்யான நெறி. அதாவது அவனால் சொல்லப்பட்ட வேதம் முதலிய நூல்களில் நுவலப்பெற்ற நல்லொழுக்க முறைமை; அதாவது விதிப்படி அருச்சித்தல், பூசித்தல் முதலியவையாகும். திருமாலுக்கு 'இருடிகேசன்'20 என்ற ஒரு திருநாமம் உண்டு. இருடிகம் என்பது இந்திரியங்களுக்குப் பெயர். அவற்றுக்கு ஈசன் தலைவன். இதனால் ஐந்தவித்தானைத் திருமால் என்றும் கொள்ளலாம்.

ஏழாவது குறளில் கடவுளைத் ''தனக்கு உவமை இல்லாதான்''21 என்று குறிப்பிடுவர். சடகோபர் ''ஒத்தார்களும் மிக்கார்களும் தனக்கு இன்றி நின்றானை''22 என்றும், ''ஒத்தார் மிக்காரை இலையாய மாமாய''23 என்றும் ''தன்னொப்பார் இல் அப்பன்''24 என்றும் அருளிச் செய்துள்ளமையால் 'தனக்கு உவமை இல்லாதான்' திருமால் ஆகின்றான். ஒப்பில்லா தவன் என்பதால் உயர்வு இல்லாதவன் என்ப தும் பெறப்படும். 'ஒப்பிலியப்பன்' என்ற திரு விண்ணகர் எம்பெருமானின் திருநாமமே 'தன் னொப்பார் இல் அப்பன்' என்ற ஆழ்வார் திரு வாக்காக வெளிப்பட்டுள்ளது. திருவாய்மொழி தோன்றுவதற்கு முன்பே இவ்வெம்பெருமா னுக்கு 'ஒப்பிலியப்பன்' என்ற திருநாமம் இருந்ததா? அல்லது திருவாய்மொழியில் இங் ஙனம் அருளிச் செயப்பெற்றதால் 'ஒப்பிலியப் பன்' என்று பெருமாளுக்குத் திருநாமம் வழங்கி வந்தார்களா? என்று விமர்சித்தாலும் இரண்டு படியும் பொருந்தத் தக்கதேயாகும்.

எட்டாவது குறளில் ''அறவாழி அந்தணன்''25 என்று இறைவனைக் குறித்தார் ஆசிரியர். அறவாழி என்பது அறக்கடல். நீர் நிரம்பிய கடல்போல அறம் நிரம்பியவன் இறையவன். அந்தணன்-அழகாகிய தண்மையை யுடையவன்; தண்மை-அருள். ஈண்டு 'ஆழி' கடலை உணர்த்தும்பொழுது ஆழ்ந்திருப்பது என்று பொருள்; இங்கு இ-என்பது வினை முதற்பொருள் விகுதி. 'ஆழி' சக்கரத்தை உணர்த்தும்பொழுது ஆழி-வட்டம்; அதனை யுடையதென்று பண்பாகு பெயர்; (பகைவரை அழிப்பதென்றும் பொருளாம்.) 'அறம்' என் பதை 'அரம்' என்பதன் திரிபாகக் கொண்டால் ஆயிரம் அரங்களையுடைய சுதர்சனம் என்னும் சக்கரத்தையுடைய திருமால் என்று பொருள் படும். ''அறவனை ஆழிப் படைஅந்தணனை'' 26 என ஆழ்வார் அருளிச் செய்திருப்பதனால் தரும சொரூபியும் சக்கரபாணியுமான திருமால் என்று கொள்ளலாம்.

ஒன்பதாவது குறளில் இறைவன் ''எண் குணத்தான்''27 என்று பேசப்பெறுகின்றான். வைணவ நூல்கள் அபஹதபாப்மத்வம், விஜரத் வம், விம்ருத்யுத்வம், விசோகத்வம், விஜிகத் ஸத்வம், அபிபாஸத்வம், ஸத்தியாகமத்வம், ஸத்யஸங்கல்பத்வம் என்றும்; வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஜ்ஞாநம், சக்தி, பிராப்தி. பூர்த்தி என்றும் எண்குணங்களை இருவகையாகப் பேசும். ஆகவே எண்குணத்தான் திருமால் ஆகின்றான். பத்தாவது குறளில் கடவுளை ''இறைவன்''28 என்றே குறிப்பிடுகின்றார் ஆசிரியர். இறைவன் -எல்லாப் பொருள்களிலும் அந்தர்யாமியாய்த் தங்குகிறவன்; இறுதல் - தங்குதல். ''எங்கு முளன் கண்ணன்'' 29 என்றும், ''உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்''30 என் றும் ஆழ்வார் அருளிச் செய்திருத்தலால் இறை வனைத் திருமால் என்று கொள்வதில் தவ றில்லை.

அரசன் தான் கருதியன செய்யுங்கால் சோம்புதலில்லாமை கூடாது என்று வற்புறுத்த வேண்டியவிடத்து,

மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய எல்லாம் ஒருங்கு31

என்று கூறுவர் ஆசிரியர். சோம்பலில்லாத மன் னவன் நிலப்பரப்பு முழுவதையும் இடையீடின் றிப் பெறுவான் என்பதை இங்கு வலியுறுத்து கின்றார். ஈண்டு 'அடி அளந்தான்' என்பதால் எல்லா உலகையும் அளந்த திரிவிக்கிரமனைச் சுட்டுகின்றார் ஆசிரியர். இதனாலும் இறை வன் திருமால் ஆகின்றான். ஈசுவரன் என்ற தத்துவத்தைத் தான் மேலே குறிப்பிட்ட திரு வாய்மொழித் தனியன் 'மிக்க இறைநிலை' எனச் சுட்டுகின்றது.

—தொடரும்.

---

1. திருவள்ளுவமாலை,3
2. தொல். பொருள். மரபு-89
3. திருவாய்.1.1:2
4. கம்ப. சுந்தர-காப்பு.
5. பரிபாடல்-3வரி 68
6. திருவாய்.9.6:4
7. தொல். பொருள்-மரபு. 71
8. குறள்-1.
9. திருவாய் 1.3:5.
10. குறள்-2
11. திருவாய்.
12. குறள்-3
13. திருவாய்-1.1:2
14. குறள்-4.
15. திருவாய். 1.6:5
16. குறள்-5
17. குறள்-388
18. புருடோத்தமநாயுடு, பு.ரா: 'இறைவன்' என்ற கட்டுரைகாண்க.
19. குறள்-6
20. திருவாய்-2.7:9,10.
21. குறள்-7.
22. திருவாய்.4.5:7.
23. திருவாய்-2.3:2.
24. திருவாய்-6. 3:9.
25. குறள்-8
26. திருவாய்.1.1:7.
27. குறள்-9
28. குறள்-10
29. திருவாய். 2.8:9
30. திருவாய். 1.1:7
31. குறள்-610.

—தொடரும்.

# சிவஞான சித்தியார்

மகாவித்துவான்

திரு. சி. அருணைவடிவேலு முதலியார், காஞ்சிபுரம்

'உலகின்பம், வீட்டின்பம், என மக்கள் அடையும் இன்பம் இரண்டு. அவற்றுள் உலகின்பம் துன்பத்தொடு விரவி, நில்லாது பெயரும் சிறுமையுடையது; வீட்டின்பம் அவ்வாறின்றி எஞ்ஞான்றும் நீங்காது நிற்கும் பெருமையுடையது. இவை இரண்டனையும் உணர்த்தும் நூல்கள் முறையே 'உலகநூல்' எனவும், 'மெய்நூல்' எனவும் சொல்லப்படும். உலக இன்பத்தினும் வீட்டின்பமே சிறந்ததாகலின், உலக நூலினும் மெய்ந்நூலே சிறந்ததாகும். அத்தகைய மெய்ந்நூல்களுள் சிறந்த தனிப் பெருநூல் சிவஞானசித்தியார்.

சிவஞானசித்தி என்பதே இதன் பெயராயினும், திருக்கோவையார், திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்பனபோல, உயர்திணைப் பன்மைக்குரிய 'ஆர்' என்னும் விகுதி சேர்த்து, 'சிவஞானசித்தியார்' என வழங்கப்பட்டு வருதலே இதன் உயர்வை விளக்கும். இன்னும் 'சிவத்திற்குமேல் தெய்வமில்லை; சித்திக்குமேல் நூலில்லை' என வழங்கும் பழமொழியாலும், ''பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே ஓர்விருத்தப் பாதி போதும்'' என்னும் சிவபோகசார வெண்பாப் பகுதியாலும், இதன்பெருமை தெளியப்படும். இதுபற்றியே பழைய வெண்பா ஒன்று, தமிழ் மொழியிலுள்ள சிறந்த நூல்களையும், உரையையும் வரையறுக்கப்புகுந்து,

''வள்ளுவர்நூல் அன்பர்மொழி வாசகந்தொல்
காப்பியமே
தெள்ளுபரி மேலழகன் செய்தஉரை-ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாந் தரம்''

எனக் கூறிற்று. இவ்வெண்பாவினாலே, எல்லா நூல்களையுங்கற்று முடிவில் சிவஞான சித்தியைக் கற்குமிடத்தே தமிழ்ப் புலமை நிரம்புகின்றது என்பதும் பெறப்படும்.

முதல்நூல் வழிநூல் சார்புநூல் என்னும் மூவகை நூலுள், சிவஞான சித்தி வழிநூல் வகையைச் சார்ந்தது. இதன்முதல்நூல், இதன் ஆசிரியராகிய அருணந்தி சிவாசாரியர்க்கு ஆசிரியரும், சைவ சந்தான முதற்குரவரும் ஆகிய மெய்கண்டதேவ நாயனார் அருளிச் செய்த சிவஞானபோதம். அது, நூலின் இலக்கணத்திற்குச் சிறந்த இலக்கியமாய், பன்னிரண்டே சூத்திரங்களை உடையதாய் மிகவும் சுருங்கித் திட்பநுட்பங்களைப் பெரிதும் கொண்டுள்ளது. அதனால், பேரறிவாளராகிய ஒரு சிலர்க்கே அது பெரிதும் பயன்படுவதாகின்றது. ஆதலின் அதன் பொருளை யாவரும் இனிதுணருமாறு விருத்தப்பாவினால் எளிய நடையில் விரித்தல் யாப்பாற் செய்யப்பட்டது சிவஞானசித்தி. இதனால், 'முதல்நூல்' என்னும் முறையிற் சிவஞானபோதம் சிறப்புடையதேயாயினும், பயன்படும் முறையில் சிவஞானசித்தி சிறந்து விளங்குகின்றது.

மெய்கண்டநூல் எல்லாவற்றுள்ளும் மிகப் பெரிய நூலாகிய சிவஞான சித்தியார், 'பரபக்கம், சுபக்கம்' என்னும் இருபெரும் பிரிவுகளையுடையது. இப் பிரிவுகள் இரண்டும் இருபெரு நூல்களாந் தன்மையையும் உடையன. அதனால், ஒவ்வொன்றன் தொடக்கத்திலும் 'மங்கல வாழ்த்து, நூல்வழி, அவையடக்கம்' முதலியன கூறப்பட்டுள்ளன. பரபக்கம் முந்நூற்றொரு செய்யுட்களையும், சுபக்கம் முந்நூற்றிருபத்தெட்டுச் செய்யுட்களையும் உடையன.

பரபக்கம் பிற சமயங்களை, மதமும் மறுதலையுமாக வைத்து மறுக்கின்றது. 'மதம்' என்னும் பகுதியுள், அந்தச் சமயத்தின் கொள்கைகள் அதிற் சொல்லப்படும் முறையிலே சொல்லப்படுகின்றன. 'மறுதலை' என்னும் பகுதியுள் அக்கொள்கைகள் தருக்க முறையில் தக்கவாற்றான் மறுக்கப்படுகின்றன. இப் பரபக்கப் பகுதி மறுப்பு நூலாய் அமைதலின், இதன்கண், நகைச்சுவை முதலிய இலக்கியச் சுவைகளோடு கூடிய பலவகைச் சந்தங்களால் அமைந்த பாடல்களைக் காணலாம். எடுத்துக்காட்டாக,

உலகாயத மதங்கூறுமிடத்து, உலகாயதன் வருகையை, 'மகளிர் இன்பமே வீட்டின்பம்' எனக் கொண்ட அவன் கொள்கைக்கு மிகவும் ஏற்ப, ''சந்தணைபுயத்து மணமாலைகள் தயங்க, உந்தி உலகத்தில் உலகாயதன் உரைப்பான்'' என வருணிக்கின்றார் ஆசிரியர். அதனுள் மணமாலைகள் என்பது வாசனைபொருந்திய மாலைகள் எனப் பொருள் தரினும், பல மகளிர் சூட்டிய பல மணமாலைகள் என்னும் நயத்தையும், உந்தி என்பது, உரைப்பான் என்பதனோடு இயைந்து, முற்பட்டு வந்து கூறுவானாயினன் எனப் பொருள்தரினும், 'உந்தி

உலகத்தில் உலகாயதன்' என்று இயைந்து, மகளிரது 'உந்தி யுலகத்தில் மூழ்கிக்கிடக்கும் உலகாயதன்' என்னும் நயத்தையும் தந்து நகைவிளைத்தலைக் காணலாம். இன்னும் அப் பகுதியுள், அவன் கூறுங் கூற்றாக,

''வாழவே வல்லை, வாமி
வலக்கைதா, என்னு யிர்க்குத்
தோழன்நீ, உன்னை ஒப்பார்
சொல்லிடின் இல்லை கண்டாய்!
கோழைமா னுடர்தீ தென்னுங்
கொலைகள வாதி கொண்டே
குழும்வார் குழலார் மொய்ப்பச்
சுடரெனத் தோன்றி னாயே''

என்னும் செய்யுள் அறிஞர்கட்குப் பெருநகை விளைப்பதாகும். மற்றும் அதன்கண் இவ்வாறு அமைந்துள்ள பாடல்கள் பல.

இனி, மாயாவாதி மத மறுதலைக்கண், 'நானே பிரமம்' என்னும் கொள்கையின் மறுப் புக்குத் தோற்றுவாய் செய்துகொள்ளுமிடத்து, 'உயிரே கடவுள் எனின், பாச பந்தமும், அத னினின்றும் விடுதலையடையச் செய்தற்குரிய சாதனங்களும், அச் சாதனங்களாற் பெறும் பயனும் அவ்வுயிர்க்கு வேண்டாவாய் முடியு மாதலின், அங்ஙனங் கூறுதல் பொருந்தாது' என்னுங் கருத்தினையுடைய,

''ஏகம் நானென இயம்பி இப்படி
அறிந்து முத்தியடை மின்னெனும்
மோக மானஉரை சோகம்; இன்பொடு
முடிந்தி டாது, மல டாகிய
காக மானது கருங்க வின்தசை
பறித்து, அழுங்கரிய குஞ்சுதன்
தாக மார்பசி தணிக்க வாயிடைக்
கொடுத்த தென்றுரைசெய் தன்மையே'

என்னும் செய்யுள், எள்ளல் பற்றித் தோன்றும் நகைச்சுவையினை நன்கு விளக்குகின்றது. 'அஹம் பிர மாஸ்மி' என்னும் மகாவாக்கி யத்திற்கு ஒரு ஞானாசிரியன், 'உயிரே கடவுள்' என விளக்கங்கூறி உபதேசித்துத் தன் மாணாக் கர்களை ஈடேற்ற நினைப்பின், அதனால் உப தேசம் செய்பவனும், அதனைப் பெறுபவனும் வேறு வேறு இல்லையாகப் பயனும் இல்லை யாய் முடியும். முடியவே, வறியான் ஒருவன் முயன்று பொருள்தேடிச் செல்வனாகமாட்டாது 'நானே செல்வமுடையேன்; செல்வ முடையார் என்னின் வேறில்லை' என்று எண்ணி வறுமைத் துன்பத்தையே செல்வத்தாற் பெறும் இன்ப மாக நுகரும் முறைமைபோலப் பந்தத்தையே வீடாகப் பற்றிக்கிடக்கும் நிலையே உண்டாவ தாகும் என்பது இச்செய்யுளின் பொருள். இவ் வாறே பரபக்கத்துட் காணப்படும் செய்யுட் கள் பற்பல.

சுபக்கம் தன் கொள்கையை விளக்குவ தாகலின், அதன்கண் ஆழ்ந்தும் அகன்றும் உள்ள பொருள்கள் மல்கிக் கிடக்கின்றன. செய்யுட்களும் ஆற்றொழுக்குப் போலத் தொடர்ந்து ஒரே வகையான சந்தத்தில் அமை தியாகச் செல்கின்றன. மங்கல வாழ்த்தைத் தவிர்த்து, அடுத்த செய்யுள் முதல் இருநூற் றைம்பத்தொரு செய்யுட்கள் ஒரேவகையான அறுசீர் விருத்தங்களாய் உள்ளன. அளவையிய லுள் ஒருசில செய்யுட்களும், இடையில் ஒரு செய்யுளும் இசை சிறிது வேறுபட்ட அறுசீர் விருத்தங்களாகும். இருநூற்றைம்பத்திரண்டு செய்யுட்களுக்குப் பின்னுள்ளன யாவும் எண் சீர் விருத்தங்களே. இங்ஙனம் இறுதிப் பகுதியை எண்சீர் விருத்தங்களாகக்கொண்டு இயற்றியது, அப்பகுதியிற் கூறப்படும் பொருள்கள் முன்னர்க் கூறிவந்த பொருள்களினும் சிறப்புடையன வாதல் பற்றியேயாம். ''ஓர் விருத்தப்பாதி போதும்'' எனச் சிவபோக சாரத்துட் கூறப் பட்டது, இவ்வெண்சீர் விருத்தங்களின் ஒன் றாகிய, ''அறியாமை அறிவகற்றி'' என்னும் விருத்தமே எனக் கூறுதல் மரபு.

சுபக்கத்தின் தொடக்கத்தில், 'அளவை யியல்' என்னும் ஒரு பகுதியை அமைத்துள்ளார் ஆசிரியர். அது, சைவ சித்தாந்தத்தின் அளவை முறையை நன்குணரப் பெரிதும் பயன்படுவ தாகும். வைசேடிகம் நையாயிகம் என்னும் வட மொழி இருவகைத் தருக்க நூல்களைப் பல் யாண்டு வருந்திக் கற்றுணர வேண்டுவன வற்றை இப் பகுதியால் மிக எளிதில் உணர லாகும். அன்றியும் தருக்கநூலின் சில பொருந் தாக் கொள்கைகளைப் பொருந்துவனவாகக் கொள்ளும் மயக்கவுணர்வும் இதனால் நீங்குவ தாகும். இப்பகுதி, சிவஞான போதத்தின் முதல் இயலாகிய பிரமாண இயலின் பொருளை நன்குணர்தற்குக் கருவியாகச் செய்யப்பட்டது.

இதற்குப் பின்னர், முதல் நூலின் பொருளை முறையாக விளக்கத் தொடங்கி அந்நூலின் ஒவ்வொரு சூத்திரப் பொருளை ஒவ்வோர் அத்தியாயமாகக்கொண்டு, அவ்வத் தியாயங்கட்கு, 'முதற்சூத்திரம், இரண்டாம் சூத்திரம்' என்பன முதலாகவே பெயரிட்டுப் பன்னிரண்டு அத்தியாயங்களால் அதனை முடிக் கின்றது. சூத்திரம் என்பது இதன்கண் இருமடி யாகுபெயராய், முதற்கண் சூத்திரப் பொருளை யும், பின்னர் அதனை விளக்கும் அத்தியாயத் தினையும் குறிக்கும்.

ஒவ்வோர் அத்தியாயத்திலும் முதற்செய் யுள், முதல்நூற் சூத்திரப்பொருள் அதில் உள்ள வாறே விருத்தயாப்பாற் சொல்லப்பட்டுப் பின் னர் விரிவான விளக்கங்கள் தடைவிடை முறை யிற் கூறப்படுகின்றன. விளக்கங்கள், முதல் நூல் வார்த்திகத்துள் கண்ணழித்துரைத்த வாறே பல கூறுகளாக (அதிகரணங்களாக)ப் பகுத்துக்கொண்டு தரப்படுகின்றன.

இந்நூல், பரபக்கத்துள் பிற சமயங்களின் கொள்கைகளுக்குத் தான் தடை பல நிகழ்த்தி யும், சுபக்கத்துள் தன் கொள்கைக்குப் பிற சமயத்தார் நிகழ்த்தும் தடைகளுக்குத் தான் தக்க விடைகளைக் கூறியும் செல்லுதலால், சில பொருள்கள் இரண்டிடத்திலும் ஒப்பக் காணப்படும். அவ்வாறு காணப்படினும் அவை ஆங்காங்கு வேறு வேறு போக்கிலும், நோக்கி லும் அமைந்துள்ளன என்ப.

சிவஞானசித்தி வழிநூலாதலின், அதற்கேற்ற இயல்புகள் சிலவற்றைப் பெற்றுள்ளது. அஃதாவது, வழிநூல் முதல்நூற் பொருளையே விளக்குவதாயினும், காலத்திற்கு ஏற்பச் சில வேறுபாடுகளும் அதன்கண் சேர்த்துக் கூறப்படும் என்பது வழிநூற்கு இலக்கணமாக இலக்கண நூல்களுட் கூறப்படுகின்றது. அவ்வாறே இது, முதல்நூற் பொருளை விளக்குமிடத்து, அதனை வேறொரு நோக்கில் வைத்து விளக்குகின்றது.

சிவஞானபோதம், சைவசித்தாந்த உண்மைகளைச் சிவாநுபூதியைக் கூறும் முறையிலேயே கூறுகின்றது. அந்நூல் அநுபூதியையே பொருளாகக் கொண்டு எழுந்தது என்பது அவையடக்கச் செய்யுளில் ''தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார், எம்மை யுடைமை எமையிகழார்'' எனச் சிவத்தைத் தலைப்பட்டுணரும் சிவாநுபூதிச் செல்வரையே தனது நெறிக்குத் தலைவராகக் குறித்தமையால் நன்கு பெறப்பட்டது. படவே, அதனுட் சில சில ஆசங்கைகளை உட்கொண்டு கூறப்பட்ட பகுதிகள் அவ்வநுபவம் வாய்க்கப்பெறாது, தாம்தாம் தம் அறிவுகொண்டு அறிந்த வாற்றால் தம் பொருள்கள் பொருந்தாமை காட்டும் நோக்கத்தோடே கூறப்பட்டன என்பது விளங்கும்.

அப்பொருளைச் சிவஞானசித்தி அக்காலத்துச் சமயவாதிகள் தம் தம் சமயங்களைக் கூறும் முறையுட்படுத்து விளக்குகின்றது. அக்காலத்துச் சமயவாதிகள் தம் தம் சமயத்தை 'இறைவனாவான் இவன்; அவனால் இயம்பப்பட்ட நூல், இது; அதனுட் கூறப்பட்ட சமய ஒழுக்கங்கள் இவை; அவற்றால் அடையப்படும் வீடு இன்னது' எனப்பகுத்து, அவற்றைத் தாம் தாம் கொண்ட அளவை முறையால் விளக்கிப் பிறசமயக் கொள்கைகளை மறுத்து, தம் சமயக் கொள்கைகளை நிலைநாட்டுவர். அதனால் இந்நூலாசிரியரும் சைவசித்தாந்தத்தினை அம்முறையிலேயே நாட்டுவாராயினர். அஃது ''இறைவனையும் இறைவனால் இயம்பும் நூலும், ஈண்டளவும் பொருளியல்பும் வேண்டும் செய்தி, முறைமைகளும் பெத்தமொடு முத்தி எல்லாம்.... துகள்தீர இந்நூலிற்சொல்ல கிற்பாம்'' என்னும் பரபக்கச் செய்யுளால் அறியப்படும். சிவஞானபோத நூலுள் இம்முறையாயினும், ஏதாவதொரு நூலாயினும் யாண்டும் கூறப்படாமை குறிக்கொண்டு நோக்கத் தக்கது.

அருளாசிரியர்களால் அநுபவ முறையாற் கூறப்படும் பொருள்கள் எஞ்ஞான்றும் ஒரு படியவாய்த்திரிபின்றி நின்று நிலவும். அவற்றை எவையேனும் சில நூல்மேல் வைத்துக் கூறுதல் காலவேறுபாட்டால் வேறுபடும். ஆயினும், காலத்திற்கு ஏற்பக் குறிப்பிட்ட நூல்மேல் வைத்துக் கூறும் முறையே பலர்க்குப் பயன்படுவதாம். அநுபவ முறையாற் கூறுதலைந் தெளிதல் ஒருசிலர்க்கே கூடுவதாகும். என்னையெனின் பிற சமயவாதிகள் மேற்கூறிய முறையில் தம் சமயங்களைப் பகட்டாகக் கூறிவாதிக்கும் முறையின் முன்அனுபவத்தாற் சுருக்கமாக உபதேச முறையிற் கூறும் சொற்களை அவற்றின் பெருமையறிந்து கைக்கொள்ளுதல் மக்களில் பலர்க்குக் கூடாதென்க.

இவ்வாற்றால், இந்நூல் சைவசித்தாந்தத்தினைச் சமயநூல் முறையில், தந்துரைக்க வேண்டுவன பலவற்றையும் தந்து விரித்துரைக்கின்றது. அதனால், இது, பிற சமயங்கள்பற்றி நிகழும் ஆசங்கைகளை நீக்கிச் செல்லுதலோடு வேத சிவாகமங்களின் பொருள்பற்றி எழும் ஐயப்பாடுகளையும் நீக்கித் தெளிவிக்கின்றது. சிறப்பாகச் சைவசித்தாந்தத்திற்கு உரியநூல் சிவாகமங்களே எனக் கூறுமாற்றால், இது சிவாகமப் பொருளைப் பலவிடத்தும் தந்துரைக்கின்றது. இதுபற்றியே, சிவஞான முனிவர் இந்நூலை, 'சிவாகமங்களுக்கெல்லாம் உரையாணி' எனச் சிறந்தெடுத்துப் பாராட்டினார். ஆகவே, சிவாகமப் பொருள்பற்றிய ஐயங்கட்கு இந்நூலின்கண் முடிவுகண்ட பின்னர், மீண்டும் அதுபற்றி ஆராய்தலும், வேறு முடிபு கூறுதலும் கூடா என்பது பெறப்படும்.

வேத சிவாகமங்களின் பொருள்பற்றி முடிபுகூறும் அவ்வகையிலும் இந்நூல் ஒரு தனி முதன்மை பெற்றுத் திகழ்கின்றது. அம்முடிபுகள் பிற இடங்களிற் காணப்படாத அருமையும் பெருமையும் உடையனவாம். எடுத்துக்காட்டாக ஒன்றிரண்டைக் கூறலாம்.

''பண்டை மறைகளும் அதுநான் ஆனேன் என்று பாவிக்கச் சொல்லுவது இப் பாவகத்தைக் காணே'' என்பது வேதப்பொருளின் விளக்கம். 'இப்பாவகம்' என்றது சிவோகம் பாவனையை. காட்சியளைவகளுள், 'தன் வேதனைக் காட்சி' என்பதொன்று பௌட்கரம் முதலிய ஆகமங்களிற் கூறப்பட்டதாகத் தெரியவில்லை. இன்றியமையாத அதனை இந்நூலே நமக்குத் தெரிவிக்கின்றது.

இறைவன் கொள்ளுகின்ற திருமேனிகள் சுத்தமாயா தேகமோ, அருட்டிரு மேனியோ என்பது சிவாகமங்கள் மட்டில் உணர்ந்தவர்கட்கு ஐயப்பாடாகவே உள்ளது. அதனை இந்நூல், அவை 'அருட்டிருமேனிகளே' எனத் திட்டவட்டமாக அறுதியிட்டுக் கூறித் தெளிவிக்கின்றது. அச்செய்யுட்பகுதி, ''மூன்றும் நந்தங் கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே'' என்பது.

உருவம் இல்லாத ஒருவன் உருவங் கொள்வானாயின், உருவம் என்பன யாவும் காரியப்பாடுடையனவே யாகலின், அருட்டிருமேனியாயினும் அத்தன்மையுடையதே யாதல் வேண்டும். அதனால், இறைவன் கொள்ளும் திருமேனிகள் 'விருத்தி, பரிணாமம், விவர்த்தனம் என்னும் காரியப்பாடுகளில் எந்தக் காரியப்பாட்டினால் உளவாகும்?' என்னும் ஆசங்கையை, 'இவையெல்லாம் மாயா காரியங்களாகிய பொருட்கு உரிய விரிகள்: அவை, மாயையுட்படாதவனும், இன்ன பெற்றியை உடையவன் என வரையறுத்து உணரப்படாதவனும் ஆகிய இறைவன் தனது இச்சையால்,

வேண்டுங் காலத்து வேண்டியபடியே கொள்ளும் திருமேனிகட்குப் பொருந்தா; ஆதலின் இந்த ஆசங்கையே இறைவன் திருமேனிபற்றி நிகழ்தல் இல்லை; ஆசங்கை இல்லையாகவே, அதற்குச் சொல்லப்படும் விடையும் இல்லை' என இந்நூல் இனிது விளக்குகின்றது. இது, வேத சிவாகமங்களிலோ, பிறவிடங்களிலோ அறியப்படாத அரியதோர் உயர்ந்த முடிபு. அச்செய்யுட்களையும் ஈண்டுக் காண்டல் இன்றியமையாததாகும்.

''பந்தமும் வீடு மாய
பதபதார்த் தங்க ளல்லான்
அந்தமும் ஆதி யில்லான்
அளப்பிலன் ஆத லாலே
எந்தைதான் இன்ன னென்றும்
இன்னதாம் இன்ன தாகி
வந்திடான் என்றும் சொல்ல
வழக்கொடு மாற்ற மின்றே''

''குறித்ததொன் றாக மாட்டாக்
குறைவில னாத லானும்
நெறிப்பட நிறைந்த ஞானத்
தொழிலுடை நிலைமை யானும்
வெறுப்பொடு விருப்புத் தன்பால்
மேவுதல் இலாமை யானும்
நிறுத்திடும் நினைந்த மேனி
நின்மலன் அருளி னாலே''

இப்பகுதிக்குச் சிவஞானமுனிவர், ''எந்தையாரவர் எவ்வகை யார் கொலோ?'' என்னும் திருஞானசம்பந்தரது திருவாக்கையே பிரமாணமாகக் காட்டுதலின், இக் கருத்துப் பிற இடங்களிற் சொல்லப்படவில்லை என்பது தெளிவு.

இன்னும் இச் சிவஞானசித்தி சாத்திரமேயாயினும், சில இடங்களில் தோத்திரங்களைப் போல ஓதுவார் உள்ளத்தை உருக்கிப் பத்தி வெள்ளத்திற் படியச் செய்வதாய் உள்ளது. அவ்விடங்கள், இறைவனது அருட்டிருமேனியின் அருமையை விளக்குமிடம், பிறவி நீங்கி இறைவன் திருவடியை அடைந்து உய்யும் வழியைக் கூறுமிடம், போல்வனவாம்.

மேலும் உயிர்க்கு உறுதிபயப்பனவாய், மக்கள் இன்றியமையாது உணரற்பாலனவாகிய சில அரிய உண்மைகளை, இந்நூல் ஆராய்ச்சி முறையில் தெளிவுபட உணர்த்துகின்றது. அவை, 'நாம் செய்யுஞ் செயல்கள் யாவும் ஈசன் இடும் பணியே' எனவும், 'அவற்றை நம் செயல்களாக நாம் கருதுவதனாலேயே அவைகள் வினையாய் முடிகின்றன' எனவும், 'அங்ஙனம் நினையாது அவன் பணியாக அறிந்து நடப்பார்க்கே வினை நீங்குவதாம்' எனவும், 'வினைகள் பயன்தருவது இறைவனாலே' எனவும், 'அவ்விறைவன், வினையாற் பிணிக்கப்பட்டு மாயா தேகத்தினையடைதலும் நீங்குதலுமாகிய பிறப் பிறப்புக்களில் எவ்வாற்றானும் எஞ்ஞான்றும் வீழாதவனே' எனவும், 'அவ்வாற்றான் அவ்விறைவனை உணர்ந்தோர் செய்யும் செயல்கள் அறமும், உணராதார் செய்யும் செயல்கள் பாவமும் ஆம்' எனவும் மற்றும் இன்னோரன்னவாகக் கூறும் பொருள்களாம்.

இவ்வாறு இந்நூல் சைவசித்தாந்தத்தினை எம்மருங்கும் பற்றி ஆராய்ந்து விரித்துரைக்கும் தனிப்பெருநூலாய் இருத்தலின், சிவஞான போதத்திற்குச் செய்யுள் வடிவில் அமைந்ததொரு மாபாடியம் என்றே இதனைக் கூறலாம். சிவஞானபோதத்திற்குச் சிற்றுரை பேருரைகளை வகுத்தருளிய மாதவச்சிவஞான யோகிகளும், சிவப்பிரகாசம் முதலிய பிற நூல்கள் பற்றி அவ்வுரைகளை உரைத்தருளினராயினும், இந்நூலையே சிறப்பாகக் கொண்டு அவற்றை உரைத்தருளினார் என்பது வெளிப்படை. இதனால் இந்நூலாராயினன்றிச் சைவ சித்தாந்தத்தினை உணர்தல் என்பது இயலாததொன்றேயாம்.

---

## திருவள்ளுவரும், சேக்கிழாரும்

''அனைத்துலகப் பெருங்கவிஞர் அவையின்கண்
இங்கிலந்தின் சார்பில், ஆழ்ந்து
நுனித்துணர்ச்சீர்ச் செகப்பிரியர், மில்ட்டனார்
எனும் இருவர், நுவலத் தக்கோர்''
எனக்கிளப்பர்*; திருவள்ளு வனார், சேக்கி
ழார் என்னும் இருவர் சான்றோர்,
உனற்கருஞ்சீர்த் தமிழகத்தின் சார்பிற்செலற்
குரியர்எனல், உண்மை யாகும்!

—ந. ரா. முருகவேள்

* "England may choose to be represented by **Milton and Shakespeare**, at an international congress of World-Poets, but they are more than English. They are of all Countries, Milton no less than Shakespeare."

—Mark Pattison,
English Men of Letters.

---

# ஆலய அமைப்புகள்

'மும்மொழிக் கொண்டல்'

பேராசிரியர் திரு. பெ. திருஞானசம்பந்தன், M.A., L.T. அவர்கள்

'ஆலயம்தானும் அரன் எனத் தொழுமே' என்று சிவஞானபோதம் செப்புகிறது. உயிர் சார்ந்ததன் வண்ணமாகும் தன்மையைப் பெற்றிருப்பதால், உலகியலில் உழலும் உயிர்கள், அதில் சிக்குண்டு வினைகளைப் புரிந்து மய்க் குற்றுக் குறிக்கோளை மறந்து, மீண்டும் மீண்டும் பிறவித் தளையில் கண்டுண்டு கிடக்காமல் இருக் கவே, கோவில்கள் கட்டுவித்து இறைவனின் திருமேனிகளை அங்கங்கே பிரதிட்டை செய்து, பூசை, திருவிழா முதலியவற்றை ஏற்படுத்தி நம் உள்ளம் இறைவழிபாட்டில் ஈடுபடுவதன் மூலம் அவனைச் சார்ந்து அவன் வண்ணமே ஆகும் நிலையை ஏற்படுத்தித் தந்திருக்கின்ற னர் நம் முன்னோர்கள்.

வெளியெல்லாம் பரந்து கிடக்கும் மின் சக்தியை இயந்திரங்களின் வாயிலாக வாங்கி மின்பெட்டிகளில் சேமித்துக் கம்பிகளின் மூலம் வேண்டிய இடத்திற்குக் கொண்டு போய் ஒளி யைப் பெறுகிறோம். அதுபோலக் கும்பாபிஷே கத்தில் நடைபெறுகின்ற மந்திரம் ஓதுதல் முத லிய கிரியைகளால் அங்கிங்கெனதாபடி எங் கும் பரந்துகிடக்கும் இறை சக்தியை லயிக்கச் செய்துவைக்கிற காரணத்தால் அப்படி லயிக் கும் இடம் 'ஆலயம்' எனப்படுகிறது. முறை யாக வழிபாடாற்றும் மக்கள் ஆங்குள்ள செம் பொற் சோதியின் ஒரு பொறியை அவரவர் பக்குவ நிலைக்கேற்பத் தம் உள்ளத்தில்ஏற்றிக் கொள்ளுகிறார்கள். ஊனினை உருக்கி உள் ளொளி பெருக்கிய அடியார்கள் வரலாறு கோவிலில் சென்று வழிபடுவதனால் பெறும் பயனை நமக்கு உணர்த்துகிறது.

திருக்கோயில்களால் சிறப்புற்றது, தெய்வத் தமிழ்நாடு. திருக்கோயிலைக் கலை விளக்க மாகவும், தத்துவ விளக்கமாகவும், அருள் விளக்கமாகவும் காணலாம். சமய வாழ்வில் 'கோயிலும்' இறைவன் திருவுருவங்களும், எத் தகைய நடு நாயகமான இடத்தைப் பெற்றிருக் கின்றன என்பதை அகத்திய முனிவனின் கீழ்க் கண்ட வெண்பாவில் பார்க்கிறோம்.

குருவருளும் வெண்ணீ
றெழுத்தஞ்சும் கோயில்
அரனுருவு மென்றலைமேல்
ஆக்கும்-திருவடியும்
சிட்டான அர்ச்சனையும்
தொண்டும் சிவாலயர்க்கென்று
இட்டார் அகத்தியனார் எட்டு

தேவகிருகம், தேவாகாரம், தேவாலய தனம், தேவாலயம், தேவகுலம், மந்திரம், பவ னம், பிரசாதம், ஸ்தானம் முதலான சொற் கள் திருக்கோயில்களைக் குறிப்பனவே. இவை அனைத்தும் இறைவன் உறைவிடம் என்னும் பொருளைக் குறிப்பன. கோயில் என்ற சொல் லும் கோ-இறைவன், இல்-உறைவிடம் என்று அதே பொருளை உணர்த்துகிறது.

இறைவன் நாதாதி தத்துவங்களாலாய உலகைப் படைத்தான், எண்ணிடலங்கா உயிர் வகைகளையும் உணர்வற்ற பொருள்களையும் படைத்தும் காத்தும் கரந்தும் வருந்துகின்றான். அவற்றுள் இயங்கியும் அவற்றிற்கப்பாற்பட்டும் வருகின்றான். இறைவன் பேரறிவும் பேராற்ற லும் உடையவனாதலின் சிற்றறிவும் சிறு ஆற்ற லும் கொண்ட மனிதன் அவ்விறைவனை அவன் படைப்புக்களிடையே காண முயல்கின்றான். அம் முயற்சியின் விளைவாகவே கோவில் எழு கிறது. அங்கே கோபுரங்களில், விமானங்களில் சுவர்களில், தூண்களில், மண்டபங்களில், தேவர்களையும், மனிதர்களையும், யட்சர் களையும், கின்னரர்களையும், விலங்குகளையும் புட்களையும், மரங்களையும், செடிகளையும் அனைத்துமே செதுக்கப்பட்ட உருவங்களாக வார்க்கப்பட்ட பிரதிமைகளாக, தீட்டப்பட்ட சித்திரங்களாகக் காண்கிறோம். அனைத்தை யும் இயக்கும் இறைவனை அருவுருவாய்த் திருக்கோயிலின் கருவறையிலுள்ள சிவலிங்கத் திருமேனியாகக் காண்கிறோம். ஈசானசிவகுரு தேவ பத்ததி என்ற நூல் ''திருக்கோயிலானது சிவன், சக்தி, நாதம், பிந்து முதலாகக் கலாதி தத்துவங்களின் புறத்தோற்றமாதலின் அதைச் சிவத்தோடு தொடர்புடைய மூர்த்தி யாகப் பாவித்து வழிபடவேண்டும்'' என்று கூறு கிறது.

கோயிலின் முக்கிய பகுதி கருவறையின் மேலுள்ள விமானம். அது சதுரமாக இருந் தால் 'நாகரம்' என்றும், வட்டமாக இருந்தால் 'வேசரம்' என்றும், ஆறு அல்லது எட்டுபட்டை இருந்தால் 'திராவிடம்' என்றும், 'சில்பரத்னம் 'மானசாரம்' போன்ற சிற்ப நூல்கள் வகைப் படுத்தியுள்ளன. 'நாகரம்' நாட்டின் வடபகுதி யிலும், 'திராவிடம்' தென்பகுதியிலும், 'வேச

ரம்' இடைப்பகுதியிலும் காணப்படுவனவாகச் சாத்திரங்கள் கூறியபோதிலும், தென்னகத்திலேயே மூன்று வகைகளையும் காணலாம். நெல்லைப் பகுதியிலுள்ள ஒரு கோயிலில் நாகர அமைப்பையும், கங்கைகொண்ட சோளேச்சரத்தில் வேசர அமைப்பையும் ,தஞ்சைப்பெரிய கோயிலில் திராவிட அமைப்பையும் பார்க்கின்றோம்.

விசுவகர்மப் பிரகாசம் முதலான சிற்ப நூல்களில், இருபதுவகைக் கோவில்கள் (பிராசாதங்கள்) ஒன்றுமுதல் பதினாறு உப்பரிகை கொண்டவை குறிப்பிடப்படுகின்றன. அவை மேரு, மந்தரம், கைலாசம், விமானச்சந்தம், நந்தனம், சமுத்திரம், பத்மம், காருடம்,நந்திவர்த்தனம், குஞ்சரம், கிருகராஜம், விருஷம், அம்சம், கும்பம், சர்வதோபத்ரம், மிருகராஜம், வர்துலம், சதுரச்ரம், ஷோடாசாச்சரம், அஷ்டாச்ரம் ஆகியவை.

திருக்கோயிலின் கருவறையில் உலகுக்கே உயிரான இறைவனை ஒருருவில் இருக்கச் செய்து, திருக்கோயில் முழுவதுமே நமது உடலோடு ஒத்த முறையில் அமைக்கப்பட்டுள்ளது. கோயிலின் பல்வேறு உறுப்புகளுக்கு உடலுறுப்புக்களின் சில பெயர்களே அமைக்கப்பட்டு உள்ளன. உடலுக்குக் கால் எப்படியோ அப்படி கோவிற்றூண்கள் 'பாதம்' என்று குறிப்பிடப்படுகின்றன. பாதத்திற்குப் 'பாதுகை' தேவைப்படுவது போலத் தூணின் அடிப்பகுதி 'பாதுகை' என அழைக்கப்படுகிறது. தூணுக்கு மேல் சிகரத்திற்குக் கீழுள்ள பகுதி 'களம்' (கழுத்து) என்று வழங்கப்படுகிறது. அதற்குச் சற்று மேல் வளைந்த ஒரு பகுதிக்கு 'நாசிகா' (மூக்கு) என்று பெயர். மனித உடலுக்குத் தலை எப்படிச் சிறப்புடையதோ அப்படிக் கருவறைக்கு மேலுள்ள 'சிகரம்' (சிகையை உடைய தலை) சிறப்புடைத்து. ஒருவரின் முகத்தைக்கொண்டே இன்னாரென்று தெரிந்து கொள்வதைப்போல, சிகரத்தின் அமைப்பைக் கொண்டுதான் நாகர, வேசர, திராவிட வகைகளைப் பிரித்தறிய இயலும். கருவறையைச் சுற்றியுள்ள ஐந்து பிராகாரங்களும் மனிதனுக்குள்ள ஐந்து கோசங்களை ஒத்தன. அவை அன்னமயகோசம், பிராணமயகோம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமய கோசம் ஆகியவை. திருக்கோவிலின் ஐந்து பிராகாரங்களையும் முறையே சுற்றி இறுதியில் கருவறைக்குச் செல்லுகின்ற ஒருவன் படிப்படியாகப் பருப்பொருளான புறப் பொருளைவிட்டுக் கருப்பொருளான சூக்கும நிலையில் காணப்படும் இறைவனை நெருங்குகிறான் என்பது பொருள்.

யாத்திரிகர்கள் தங்குவதற்கெனப் பிராகார மண்டபங்களும், இசை, நாட்டியம், புராணம் படித்தல், சமயவாதம் செய்தல் ஆகியவற்றிற்கான தனி மண்டபங்களும் சில கோயில்களில் உண்டு. கோவிலில் உள்ள நான்கு வாயில்களும் நிவிருத்திகலை, பிரதிஷ்டா கலை, வித்யாகளை, சாந்திகலை சாந்தியதீத கலை, ஆகியவற்றிற்கு ஒப்பிடப்பட்டுள்ளன. கோவிலின் அகன்று விரிந்த அடித்தளம் மேலே செல்லச் செல்லக் குவிந்து தூபியில் முடிவது பருப்பொருள் சூக்கும நிலையை அடைவதைக் குறிக்கும். சிகரத்தின் மீதுள்ள அமிருதகலசம் பிறப்பிறப்பற்ற பெருநெறியை உணர்த்துகிறது.

கருவறையில் உள்ள சிவலிங்கத்தை அருவமாயும் உருவாயும் இருந்து அருட்டொழில் புரியும் இறைவனின் குறி என்று சேக்கிழார் காட்டுவதை நாம் காணலாம். 'காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய், நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்' என்பது சேக்கிழார் வாக்கு.

திருக்கோயில் அமைப்பு முப்பொருள் உண்மையை உணர்த்துவதாகும். கருவறையில் வீற்றிருக்கும் இறைவன், பதி. அவனை நோக்கிக் கிடக்கும் நந்தி பசு. நந்தியின் பின்புறம் அமைந்துள்ள பலிபீடம் பாசநீக்கத்தை உணர்த்தும். இதைத் திருமூலர் கூறுகிறார்.

''ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடலேறென நிற்கும்
ஆய பலிபீட மாகுநற் பாசமாம்
ஆய அரனிலை ஆய்ந்துகொள் வார்கட்கே''

திருக்கோயிலிலுள்ள உருவங்கள், அவற்றில் காணப்படும் முத்திரைகள், அணிகள், ஆயுதங்கள், வாகனங்கள் ஒவ்வொன்றும் ஒரு தத்துவத்தைப் பின்னணியாகக் கொண்டவை. விரிவஞ்சி அவற்றை விளக்கப் புகவில்லை, எடுத்துக்காட்டாக சோமாஸ்கந்தர் போன்ற போகமூர்த்திகளும், தட்சிணாமூர்த்தி போன்ற யோக மூர்த்திகளும், காலசம்மார மூர்த்தி போன்ற வேகமூர்த்திகளும் முறையே, காத்தல் தோற்றம், அழித்தல் ஆகிய முத்தொழில்களைக் குறிப்பன. நடராசத் திருமேனி இறைவனின் பஞ்ச கிருத்தியங்களைக் குறிப்பன என்பதை யாவரும் அறிவர்.



# நற்றமிழ்ப் பெரியரும், கொற்றவேற் கலியனும்

திரு. தி. அ. அனந்தாழ்வான், காஞ்சிபுரம்.

திருமால் உவந்து எழுந்தருளியிருக்கும் திருப்பதிகளுள் திருக்கோவலூர் தனிச் சிறப்புடைத்தாம். நற்றமிழ் போற்றும் ஆழ்வார்கள் தம் அருளிச் செயலே, வைணவத்தின் அடிப்படை என்பது கற்றுணர்ந்தார் தந்துணிபு. இத்தகு அருளிச் செயல் முதன்முன்னம் விளைந்த தலம் திருக்கோவலூராம். வில்லிபுத்தூராழ்வார் இத்திருத்தலத்தைப் போற்றுவான்,

''பாவருந் தமிழாற் பேர்பெறு
பனுவற் பாவலர் பாதிநா ளிரவின்
மூவரும் நெருக்கி மொழிவிளக் கேற்றி
முகுந்தனைத் தொழுத நன்னாடு''

என்று பாடினர். இப்பாடலின்கண் இடம்பெற்ற வரலாறு யாவருமறிந்ததே எனினும் ஈண்டுச் சுருங்க உரைக்கின்றோம்.

சீராரும் மாடத் திருக்கோவலூரின் கண்ணே, காரார்கருமுகில் பெருமுமழை பொழிந்ததொரு நாள் இரவிலே, கவிஞர் போரேறு, பெருந்தமிழர், தமிழ்த்தலைவர் ஆகிய முதலாழ்வார்கள், மாமுனியொருவர் தம் தம் இல்லத்தின் இடைகழியில் ஒருங்குற்றனர். அதுபோழ்து கோவல்மாயன் இருளில் நெருக்கப் பொய்கைப்பிரானும், பூதத்திருவடிகளும் கதிர் ஞான நல்விளக்கேற்றப், பேயர் மாமலராள் தன்னொடும் மாயனைக் கண்டுகளித்து அந்தாதி பாடியருளினர். இம்மூவரும் அருளிச் செய்தவையே 'நற்றமிழ்' என்று நாம் நயந்தினிது போற்றத் தக்க முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி என முறையே வழங்கப்படுவனவாம்.

இங்ஙனம் இவர்கள் அருளிச் செய்த திருவந்தாதிகளே திவ்வியப்பிரபந்தத்துள் முன்னம் தோன்றியவை. ''மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து நற்றமிழால் நூல் செய்து நாட்டையுய்த்த - பெற்றிமையோர் என்று முதலாழ்வார்கள் என்னும் பெரியவருக்கு நின்றதுலகத்தே நிகழ்ந்து'' என்று தணவாத சொல் மணவாள மாமுனிகளும், இவர்கள் தம் பெருமையைத் தெரிவித்தருள்கின்றார். இதனால் இவர்களுடைய பாடலின் சீர்மையும் உரைக்கப்பட்டது. இத்தன்மைத்தாய இத் தொன்மைத் தமிழ்ப் பாடலின் தோற்றம், கொற்றவேற் கலியன்றன் பாடலின்கண் உய்த்துணரும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது. என்னை? பன்னிரு ஆழ்வார்களுள் பன்னருஞ் சீர்க் கலியன் பின்னிட்டவதரித்தவர் என்பது நாம் அறிவோம். ஆதலின் திருமங்கையாழ்வார் இவ்வரிய நிகழ்ச்சியைத் தமது பாடலில் உணர்த்தியிருப்பதாகக் கூறுதலில் குற்றமொன்றுமின்றாம்

திருமங்கைமன்னன் மன்னுபுகழ்த் திருக்கோவலூரை, ''மஞ்சாடு வரையேழும்'' பதிகத்தால் மங்களாசாசனம் செய்தருளுகின்றார். இப்பதிகத்தின் நான்காம் பாடலில் முற்கூறிய வரலாறு கூறப்பட்டுள்ளது. அப்பாடல் வருமாறு:

தாங்கரும்போர் மாலிபடப் பறவை யூர்ந்து
தராதலத்தோர் குறைமுடித்த தன்மையானை
ஆங்கரும்பிக் கண்ணீர்சோர்ந் தன்பு கூரும்
அடியவர்கட் காரமுதம் ஆனான் றன்னைக்
கோங்கரும்பு சுரபுன்னை குரவார் சோலைக்
குழாவரிவண் டிசைபாடும் பாடல் கேட்டு
தீங்கரும்பு கண்வளரும் கழனி சூழ்ந்த
திருக்கோவ லூரதனுள் கண்டேன் நானே''

திருக்கோவலூரின் வளத்தை வருணிக்கும் இப்பாடலில், ''நற்றமிழாம் திவ்வியப்பிரபந்தம் பாடியருளிய பெரியோர்களாகிய முதலாழ்வார்களின் சிறப்பியல்புகள் விளக்கிக் காட்டப்பட்டுள்ளமை இனி உணர்த்தப்படும். ''ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூரும் அடியவர்'' என்பதை முதலில் நோக்குவோம். முதலாழ்வார்களை உணர்த்தும் இவ்வடியில், கண்ணீர்சோர்பவர் ஒருவர், அன்பு கூர்பவர் ஒருவர், அடியவர் ஒருவர். ஆக மூவரும் கூறப்பட்டனர்: இவ்வாழ்வார்களை இங்ஙனம் குறிப்பிட்டமை எது கெண்டு? முதலாழ்வார்களுள் முதலாய பொய்கையாழ்வார், ''கண்ணீர் சோர நிற்பவர்'' என்பதை, அவர்தம் திருவாக்கினின்றும் இனிதுணரலாம். ''பழுதே பலபகலும் போயினவென்று அஞ்சி அழுதேன்'' என்று அவர்தாமே தெரிவிக்கின்றார் அதனை. ஆனந்தக் கண்ணீர் பெருக நிற்பவர் என்று கொள்ளலாம்.

இனி ''அன்புகூர்பவர்'' ஆகப் பூதத்தாழ்வார் கூறப்பட்டதை ஆய்வோம். இவ்வாழ்வார் பாடத் தொடங்கும்போதே, ''அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக, இன்புருகு சிந்தையிடு திரியா, நன்புருகி ஞானச்சுடர் விளக்கேற்றி

னேன் நாரணற்கு, ஞானத் தமிழ்புரிந்த நான்'' என்று ''அன்பு'' என்று அருளிச் செய்தார். ''அன்பாக்கி யேத்தி அடிமைப்பட்டேனுனக்கு'' என்பர். மேலும் தமது அந்தாதியைத் தலைக் கட்டும் போது ''என்றன் அளவன்றால் யானு டையஅன்பு'' என்று மீண்டும் 'அன்பு' என்னும் சொல்லைக் கையாண்டார். ஆதலின் அன்புரு வான இவரை 'அன்புகூர்பவர்' என்றே குறிப் பிட்டனர் போலும் குறையலாளி.

இனி, பேயாழ்வார் 'அடியவர்' என்று ஈண்டுக் கூறப்படுதலைக் காண்போம். மற்ற இரண்டு ஆழ்வார்கள் விளக்கேற்ற, எம்பெரு மானைக் கண்டனர் பேயாழ்வார். உடன் தாம் கண்டவதனைப் பாடலுற்றார். ''திருக்கண் டேன் பொன் மேனி கண்டேன்'' என்று தொடங்கினாரிவர். பின்பு 'இன்றே கழல் கண் டேன்' என்று எம்பெருமான்றன் அடியை (திருவடி)க்கூறி, ஈற்றயற் பாசுரத்திலும், ''தொட்ட படையெட்டும் தோலாதவென்றி யான் அட்டபுயகரத்தான் அஞ்ஞான்று, குட் டத்துக் கோண்முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான் தாள்முதலே நங்கட்குச் சார்வு'' என்று 'அடி'யினை நினைந்தவர், ஆதலின் பேயாழ்வாரை அடியவர் என்றனர் போலும் அரட்டமுக்கி! பூங்கோவல் மாயன், பொய்கை முதலிய ஆழ்வார்களிருந்த இடம் வந்து, அவர் கட்கு அமுதுபோல் அனுபவிக்கும் வண்ணம் நின்றதனை 'ஆரமுதம் ஆனான்றன்னை' என் பது தெளிவிக்கின்றது.

இனிப் பின்னடிகளால் இதனையே விவ ரித்தருள்பவர் அருள்மாரி. ''குழாவரி வண் டிசை பாடும் பாடல் கேட்டுத் தீங்கரும்பு கண் வளரும் கழனிசூழ்ந்த திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே''. இங்கு 'வண்டிசைபாடும்' எனாது ''குழாவரிவண்டிசைபாடும்'' என்றமை யில் முதலாழ்வார் தனித்தனியே இருந்து எம் பெருமானைப் பாடாது ''குழாங்களாயடியீரு டன் கூடி நின்றாடுமினே'' என்றாற் போன்று, மூவரும் ஒன்றுகூடிக் குழாமாகத் திருமாலைப் பாடினர் என்பது உணர்த்தப்பட்டது.

இனி முதலாழ்வார்களை வண்டுகளாகக் கொள்ளுதல் யாங்ஙனெனின், கூறுவோம். வண்டுகள் தேனொன்றையே உணவாகக் கொண்டவை. முதலாழ்வார்களோ ''உளங் கனிந்திருக்கும் அடியவர் தங்களுள்ளத்துள் ஊறிய தேன்'' எனப்பட்ட எம்பெருமானையே அநுபவிப்பவர். வண்டு ''மதுவிரதம்'' என்றே வழங்கப்படும். தூமது வாய்கள் கொண்டவை வண்டுகள். இவ்வாழ்வார்களும் ''அமுதன்ன சொன்மாலையேத்தித் தொழுதேன்'' என்ற வாறு அமுதனைய வாய்மொழிகளை இனிமை யாக இசைப்பவராம்.

வரிவண்டு தேதென வென்றிசை பாடும். அதுபோன்று இவர்களும் ''தே, தே'' (உனக்கே நாம்) என்பவர்களாம். மிக வாய்ந்த அன்பாக்கி யேத்தி அடிமைப்பட்டேன் உனக்கு, என்றனர் அன்றோ மல்லைச் செல்வர்? வண்டுகள் மலரிற் பொருந்தி யிருப்பது போன்று இவர்களும் எம் பெருமான்றன் திருவடி மலரிற் பொருந்திய நெஞ்சினராவர். ஆக இவற்றான் முதலாழ்வார் களை வண்டுகளாகக் கோடல் ஏற்புடைத் தென்க.

இனி, ''தீங்கரும்பு கண்வளரும்'' என் பதை, ஆய்வாம். ''வண்டிசை கேட்டுக் கரும்பு கண்வளரும் (உறங்கும்)'' என்பது மேல் நோக் கிற் பெறும் பொருள். ஆயின் திருமாலே இங்குக் கரும்பாகக் கூறப்பட்டனர் என்று உணர்க. திருமங்கையாழ்வார் திருமாலைக் 'கரும்பே' என்றும் விளிப்பர். ''கள்வா கடன் மல்லைக்கிடந்த கரும்பே'' என்றது காண்க. மேலும் ''பெரும்புறக் கடலை'' என்னும் பதி கத்தில் முதற்பாசுரத்தில் ''கரும்பினைக் கனி யைச் சென்று நாடிக் கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே'' என்றருளிச் செய்தனர். திருக் குறுந்தாண்டகத்திலும்,

''சுரும்புஅமர் சோலை சூழ்ந்த
அரங்கமா கோயில் கொண்ட
கரும்பினைக் கண்டு கொண்டேன்
கண்ணினை களிக்குமாறே''

என்றருளிச் செய்தார். ஆதலின் இங்கும் 'கரும்பு' என்று கோவற் பெருமானாம் அடை யார் கமலத் தலர்மகள் கேள்வனையே, அடை யார்சீயம் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். ஆழ்வார்தம் பாடல் கேட்டு மகிழ்ந்தவன் கோவல்நகரான் என்பது பெறப்படும். எம் பெருமான் கண்வளர்தல் அறிதுயிலாய், உல குய்யும்வண்ணம் எண்ணிச் செய்வதாய் நிற்ற லின் முதலாழ்வார்களால் இவ்வுலகிருள் நீங்கப் பெறுமாறு எண்ணியதை உணர்த்துமாதலின் ''தீங்கரும்பு கண்வளரும்'' என்றார். இனி கண் வளர்தல் என்பது கரும்பின் கணு வளர்தலை யும் குறிக்குமாதலின், முதலாழ்வார் பாடலால் பெருமை மிகப் பெற்றவன் என்றும் பொருள் கொள்ளலாம். குழாவரி வண்டிசைபாடும் பாட லாகிய மூன்று திருவந்தாதிகளால், எம்பெரு மான் பெருமையில் உயர்ந்து நின்றான் என்ப தும் பொருத்தமுடைத்தே.

திருக்கோவலூரில் நிகழ்ந்த இவ்வரலாற் றைத் திருவரங்கத்தமுதனார், வில்லிபுத்தூ ராழ்வார் முதலாயோர் தமது பிரபந்தத்துள் சிறப்பித்துப் பாடியுள்ளனர். வேதாந்த தேசி கன் தமது ''தேகளீசஸ்துதி''யின்கண் இவ்வர லாற்றைக் குறித்து, ''பொய்கை முதலான ஆழ் வார்களின் நெருக்கத்தால் எம்பெருமானிட மிருந்து இன்சுவை வெளிப்பட்டது. அச்சுவை பெண்ணைக்கரையில் விளங்கும் வளங்கொள் கரும்பின் சுவை யனைத்து. எம்பெருமான் றன்திருவடித் தாமரையினின்றும் பெருகும் தேன் வெள்ளத்தைப் பேரன்பர்தாம் சுவைத் துப் பருகுவர். அத் தேன் வெள்ளத்திற்கு இக் கருப்பஞ்சாறு ஒப்பில்லாததோர் சருக்கரை யாம் தன்மையை அடைகிறது'' என்று அழ குறக் கூறியுள்ளார். இங்குக் கோவலூரான் கரும்பாகக் கூறப்பட்டனன்.

இதுகாறும் விளக்கியவற்றால், கலிகன்றி யொலி செய்த இவ்வின்பப் பாடலில், தமிழ் மறை தோன்றிய வரலாறும், அதனை அருளிச் செய்த முதலாழ்வார்கள் ஆகிய பெரியோர் களின் இயல்பும் உய்த்துணரும் வண்ணம் அமைந்திருத்தல், அறிந்து இன்புறற்பாலது.

# நாதமுனிகளும், ஆளவந்தாரும்

திரு. எம். எஸ். இராசகோபாலாச்சாரியார், திருவரங்கம்

வைணவ சமயப் பெருஞ் சான்றோர்கள் ஆழ்வார்கள் என்றும், ஆசாரியர்கள் என்றும் இரு வகைப்படுவர். ஆசாரியர்களின் வரிசையில் முதல்வர், நாதமுனிகள் என்பவரே ஆவர். இவர் சிதம்பரத்திற்கு அருகேயுள்ள வீர நாராயணபுரம் என்னும் காட்டுமன்னார் கோயிலில் அவதரித்தார். நாதமுனிகளின் நற்பெருந்தொண்டினாலேயே நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் நாடெங்கும் பரவித் தழைத்து நலமுற வளர்வதாயிற்று. வடமொழி வேதத்திற்கு வேத வியாசர் போல, தமிழ் மறைகளாகிய திவ்வியப் பிரபந்தங்களுக்கு நாதமுனிகள் செய்தருளிய நல்ல பெருந்தொண்டு, எல்லையில்லாததாகும்.

நாதமுனிகள் புதல்வராகிய ஈசுவரபட்டாழ்வார்க்கு மைந்தராகத் தோன்றியவரே, ஆளவந்தார் ஆவர். இவருக்கு யமுனைத் துறைவர் எனவும் ஒரு பெயர் உண்டு. இவர், மணக்கால் நம்பிகள் பக்கல், பகவத் கீதையின் பதினெட்டு அத்தியாயப் பொருளும் நுண்ணிதின் ஆய்ந்து முறையே கேட்டுணர்ந்து தெளிந்துணர்ந்தவர்.

''அண்டர்கோன் அணியரங்கன்
என் அமுதினைக்
கண்ட கண்கள் மற்று
ஒன்றினைக் காணாவே''

என்றபடி, அரங்கநாதன்பால் அளவற்ற அன்பும் ஈடுபாடும் கொண்டு, திருவரங்கநாதனுக்கு ஆட் செய்வதற்காகவே துறவு நெறிபூண்டு, தென் திருவரங்கமே பதியாகக் கொண்டு வாழ்ந்தருளி வந்தவர். ''ஆம் முதல்வன் இவன்'' என்று ஓர்ந்தறிந்துணர்ந்து, தமக்குப் பின்னர் எம்பெருமானார் என்னும் இராமாநுசரை, வைஷ்ணவ சமய தரிசனத்திற்குத் தலைவராக அமர்ந்து அதனைப் பாதுகாத்துப் பரப்பியருளும்படி புரிந்தவர் ஆளவந்தாரே யாவார். ''ஆளவந்தாரோடு யான் கூடியிருந்து குளிரப் பெற்றிருப்பேனாயின், பரமபதத்திற்கே படிகட்டியிருப்பேனே'' என்று, தன் அன்பும் ஆராமையும் தோன்ற இராமாநுசர் பலகாலும் பணித்தருள்வாராம். இதனால் ஆளவந்தாரின் அருமை பெருமைகளை, நாம் அனைவரும் இனிதறியலாம்.

தேவாலயங்களில் இறைவனுடைய திருவுருவங்களைத் திருப்பிரதிட்டை செய்து வழிபடுவதும், திருவிழாக்களை நடத்தி மனநிறைவு பெறுவதும், நம் நாட்டிற்கே உரிய தொன்மையானதோர் நெறியாகும். இதற்கு ஆதாரங்கள் பலவற்றை வடமொழி மறைகளில் ஆங்காங்குக் காணலாம். ஆயினும் இப்பொழுது இங்கு ஓதப்படும் இந்த மறைகளின் முன்பகுதியில் வேள்விகள் நடத்தப்பெறும் முறைகளும், பின் பகுதியான உபநிடதங்களிலே இறைவனைத் தியானிக்கும் முறைகளுமே பெரும்பாலும் தெளிவாகவும் விரிவாகவும் விளக்கப்பட்டுள்ளன.

சுவேதத்வீபத்தில் உள்ளோர் ஓதும் மூல வேதத்தில், ஆலய வழிபாட்டு முறைகளும் அர்ச்சாமூர்த்திகளின் திருப்பிரதிட்டை முதலியனவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன என்பர் பெரியோர். இதனை இறைவனே அடியார் மீதுள்ள கரைபுரண்ட கருணை வெள்ளத்தால் நம் முன்னோர்க்குத் தானே உபதேசம் செய்தருளினான். இதையே பாஞ்சராத்திர ஆகமம் என்பர்.

இறைவன் வழிபாட்டு முறைகள் ஆறில், இதனைத் தவிர மற்ற ஐந்தும் தெளிவாகக் கூறப்படாமையால், இருள் நிறைந்த இரவு போல் உள்ளதாக உணர்த்துவதற்கே இந்த ஆகமத்தைப் பாஞ்சராத்திரம் எனக் கூறலாயினர். வேதத்தைப் பிரமாணமாக (மூலாதாரமாக) ஏற்றுக்கொண்டுள்ள சங்கரரும், அவருடைய வழியில் வந்த சுரேசுவரர் போன்றவர்களும், பாஞ்சராத்திர ஆகமத்தில் உள்ள வழிபாட்டு முறைகளையும், ஒரு நாளை ஐந்தாக வகுத்து அவ்வக் காலத்தில் அந்த அந்த நித்திய கருமங்களைச் செய்யும் மரபினையும் அப்படியே ஒத்துக் கொள்வதாகத் தம் தம் நூல்களில் ஐயம் திரிபிற்கு இடமின்றி எழுதி வைத்துள்ளனர்.

வேதவியாச பகவானும், மகாபாரதத்தில் இந்தப் பாஞ்சராத்திர ஆகமத்தின் பெருமையைப் பரக்க விவரித்துள்ளார். இவரே தமது பிரம்ம சூத்திரங்களிலும் இதன் மகத்துவத்தைத் தாபித்துள்ளதுவும் தெளிவு.

ஆயினும் சிலர் இந்த ஆகமத்தை மூலப் பிரமாணமாக ஒத்துக் கொள்ளவில்லை. சங்கரரும் பிரம்ம சூத்திரங்களுக்கு உரையிடும்போது, இதில் சில குறைகள் இருப்பதாக எழுதியுள்ளார். இவை அனைத்துக்கும் பதில் கூறி, மாசற்ற இதனுடைய மகிமையை, ஆளவந்தார் தமது 'ஆகமப் பிராமாணியம்' என்னும் இந்த நூலில் விரிவாகக் காட்டியுள்ளார். இவர் ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு சோழ

வளநாட்டில் தோன்றியவர். இவருடைய திருப் பாட்டனாரான நாதமுனிகள், இந்த ஆக மத்தை உலகில் பரப்பத் திருவுள்ளம் கொண் டார். நேர்மையுடன் ஈட்டிய பொருள்களைக் கொண்டு, நெறி பிழறாது நடத்த வேண்டிய வைதிகப் பொருள்களைச் செவ்வனே செய் வதற்கு, இந்தக் கலிகாலத்தில் மாந்தரின் தகுதி யின்மையை, அவர் உணர்ந்ததுவே இதற்குக் காரணமாகும்.

இந்த நாதமுனிகளே அரும் தவமியற்றி ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் ஆகிய நாலா யிரத் திவ்வியப் பிரபந்தத்தை நம்மாழ்வாரி டத்தே ஓதி, நாடெங்கணும் மறை ஓதுவிழா நடத்தித் தமிழ் மறையின் மணத்தைப் பரப்பி னார் என்று வரலாற்றில் காணலாம். தமர் உகந்து தமக்கென அளித்த திருவுருவங்களில், இறைவன் நித்திய சாந்நித்தியம் செய்து அடிய வர்களுக்குக் குறைவின்றி அருள்பாலிக்கும் அர்ச் சாவதாரங்களில் ஆழ்வார்கள் மண்டிக் கிடந்த தையும், நாதமுனிகள் கண்டு கொண்டது, இன் னொரு காரணம் ஆகும். இறையுணர்வை இனிதாக அளித்து மேன்மேலும் வளர்க்கவல்ல பாஞ்சாரத்திர ஆகம முறைப்படி ஆலயங் களைச் சீர்படுத்தியும், இதை ஆட்சேபித்தவர் களின் வாதங்களுக்குத் தக்க பதில் கூறியும் பாஞ்சராத்திர ஆகமத்தை நிலைநாட்டிய பெருமை நாதமுனிகளுக்கு உரியது. அவரு டைய ஆணையைச் சிரமேற்கொண்டு, அவர் திருப்பேரனாரான ஆளவந்தார், பிற்காலத் தில் இது மங்காமலிருப்பதன் பொருட்டுக் கல் வெட்டாக இருக்க வேண்டும் என்று எண்ணியே 'ஆகமப் பிராமாணியம்' என்னும் இந்த அரிய நூலை எழுதி உதவியுள்ளார்.

திருமால் வழிபாட்டுடன் கூடிய விசிட் டாத்வைத வேதாந்த சித்தாந்தத்தைத் தழைக் கச் செய்த பெருமையும், இந்த இரண்டு ஆசார் யர்களுக்கும் உண்டு. நாதமுனிகள் பிரம்ம சூத்திரத்தின் பொருளை அறிய உதவியாக இருக்கும்பொருட்டு, நியாய தத்துவம் என்றும், யோகாப்பியாசம் செய்வார்க்கு உதவியாக யோக ரகசியம் என்றும், இரு நூல்களை எழுதி வெளியிட்டார். இப்படி இவர் தொடங்கிய பணியைத் தொடர்ந்து, இவருடைய திருப்பேர னாரான ஆளவந்தார், இந்த விசிட்டாத்வைத சித்தாந்தம் நாடெங்கும் பரவும்படி செய்து எட்டு நூல்களை எழுதியுள்ளார்.

வீட்டிலும் ஆலயங்களிலும் திருமால் வழி பாடு செய்யும்முறையை விளக்கும் பாஞ்சராத் திர ஆகமங்களின் பெருமையை நிலைநாட்டு வது, இந்த ஆகமப் பிராமாணியம் எனும் நூல். இது வைகாநச ஆகமத்தின் உயர்த்தியைத் தாபிப்பதுமாகும். புருஷசூக்தம் முதலிய வேத மந்திரங்கள் திருமாலின் பெருமையைப் பேசு வதை விளக்கும் புருஷ நிர்ணயம் என்பது இவர் எழுதிய இரண்டாவது நூலாகும். அறிவாக மாத்திரமின்றி அறிகிறவனாகவும், பிறப்பில் லாதவனாகவும், சடப்பொருளைக் காட்டிலும் வேறுபட்டவனாகவும், அணு அளவுள்ளவனாக வும் உள்ள சீவனை விளக்கும் ஆத்மசித்தியும், அறிவின் தன்மையைத் தெரிவிக்கும் சம்வித் சித்தியும், இறைவனை விளக்கும் ஈசுவரசித்தி யும் என்று இவர் எழுதிய சித்தித்திரயம் எனும் நூலை ஆதாரமாகக் கொண்டே பகவத் இராமாநுசர் தமது பாஷ்யத்தை அருளிச் செய் தனர். பகவத் கீதைக்கு உரிய பொருளைச் சொல்ல வேண்டிய வழியை வகுக்கும் கீதார்த்த சங்கிரகமும் இவர் எழுதியதே.

பகவத் கீதையில் இறுதியில் கண்ணபிரான் உபதேசித்த சரமசுலோகத்தின் பொருளான சரணாகதியைச் செய்ய வேண்டிய முறையைத் தன் செய்முறையால் விளக்கக் கருதிச் சது சுலோகி, தோத்திரரத்திநம் எனும் இருநூல் களையும் அருளிச் செய்துள்ளார். நம் வினை களுக்கேற்பப் பயனளிக்கும் இறைவனைச் சாந் தப்படுத்தி அவருடைய திருவடிகளில் நாம் சரணாகதி செய்ய அவர்ரை அணுகலாம்படி பரிந் துரை செய்யும்படி பெரியபிராட்டியாரை வேண்டிக்கொள்வதாக அமைந்தது சதுசுலோகி. நம் அவல நிலைமையைக் காட்டிப் பெரு மாளுக்கு எதிரிடையாகப் போகாமல், அவர்க்கு உட்பட்டிருந்து, அவரிடம் முழுநிறைவான நம் பிக்கை வைத்து வேண்டும் பயனை அறிவித்து அதனைப் பெற வேறு சாதனங்களை அநுட்டிக் காமல் அந்தப் பொறுப்பை அந்தப் பெருமாள், தாயார் இருவரிடம் ஒப்புவித்து விடுவதையே தோத்திர ரத்திநம் எனும் அரிய துதி நூல் விளக்குகின்றது.

இவற்றுள் இந்தப் பாஞ்சராத்திர ஆக மத்தை எதிர்ப்பவர்கள் கூறும் வாதங்களையும் இவற்றிற்கு இந்நூலில் கூறப்படும் விடைகளை யும் ஒரு சிறிது சுவைத்து இன்புறுவோம்.

**கேள்வி:** இந்த ஆகமம் வேதத்திற்கு எதி ரானது. வேதம் சீவாத்மா பிறப்பில்லாதவன் என்கிறது. பரப்பிரமத்தினிடமிருந்தே மனம் முதலிய புலன்கள் பிறந்ததாகச் சொல்லுகிறது. ஆனால் இந்தப் பாஞ்சராத்திரத்தில் சங்கருட ணன் என்கிற சீவாத்மா பிறக்கிறான். இவனி டமிருந்து மனம் பிறக்கிறது என்கிறது. இப்படி வேதத்துடன் முரண்படுவதால் இதனை வைதி கர்கள் நிராகரிக்க வேண்டாமா?

**பதில்:** இந்த வாக்கியத்திற்கு இது பொரு ளன்று. சீவர்களுக்கு அதிட்டான தேவதையான சங்கருடணராக இறைவனே அவதாரம் செய் கிறான். இவர்க்குப் பிறகு மனத்திற்கு அதிட் டான தேவதையாகப் பிரத்தியும்நர் அவதரிக் கிறார் என்றே அதற்குப் பொருள். மேலும் ஆன்மாக்களும் சடப்பொருளும் இறைவனு டைய சொத்தேயாகும். இவற்றுள் சடப் பொருளான பிரகிருதி கணம்தோறும் மாறும் இயல்பை உடையது. ஆன்மாக்கள் பிறப்பது மில்லை, இறப்பதுமில்லை எனப் பாஞ்சராத் திர ஆகமம் தெளிவாகச் சொல்லியுள்ளது.

இறைவனைத் தியானிப்பதற்கு வாய்ப் பாக அவரை வாசுதேவர், சங்கருடணர், பிரத் தியும்நர், அநிருத்தர் என்று நான்கு திருவுருவங் களைக் கொண்டு காட்சி தருகிறார். தியானிப் பவர்களின் தகுதி உடைமைக்கேற்ப இந்த உரு

வங்களில் சிற்சில பிரம்ம குணங்களே வெளியிடப் படுகின்றன. இவ்வவதாரங்கள் பல்வேறு பொருள்கட்கு அதிட்டான தேவதைகளாவர்.

...ம் பய
...சனகரை
... கற்றுப்
...லியிருப்ப
...ம், பாஞ்
...தாலும்,
...தளிவாக

...ற கூறுவ
...சாண்டில்

யர் அவற்றில் சொல்லிய தருமங்களைச் செய்து அதன் பலனை விரைவில் பெறத் தாம் ஆற்றல் பெற்றிருக்கவில்லையென்று தம்மையே சனகரிடம் முறையிட்டுக் கொண்டார். சனகர் இந்த ஆகம முறைப்படி அர்ச்சாமூர்த்தியின் பூசனை நெறிகளை எடுத்துரைத்தார் என்றுதான் இங்குக் கூறப்பட்டுள்ளது. எனவே முரண்பாடு எதுவும் இல்லை என்பது கண்கூடு.

இம்மாதிரி பல வினாக்களுக்கு விடைகள் அளித்து இந்நூலை ஆளவந்தார் இயற்றியுள்ளார். ஆளவந்தார் அருளிய இத்தகைய நூல்களைப் போற்றிப் பயின்று நலம் பெறுவது, வைணவப் பெருமக்களுக்கு இன்றியமையாத சிறந்த கடமையாகும்.

---

## ...மிழ்ஞான சம்பந்தன்''

...சான்றோரும் இனிதுதம்மைச்
...டிக்கொண் டிராத வண்ணம்
... ''தமிழ்ஞான சம்பந்தன்''
...ன்றுதம்மைச் சாற்றிக் கொண்டும்,
...பல் அடைமொழியால் அருந்தமிழைப்
...கழ்ந்துரைத்தும், அளப்பில் தொண்டு
...ழ்க்குச் செய்துயர்ந்த திருஞான
...ம்பந்தர் சீர்த்தி வாழ்க!

—ந. ரா. முருகவேள்

## "தமிழகக் காப்பியம்"

...னயோ காப்பியங்கள் இன்றமிழில்
...இருந்தாலும், அவைகள் எல்லாம்
...ஞ்சேர் தமிழ்க்காப்பி யங்கள்என்றே
...விளம்பலுறும்; வியக்கத் தக்க
...றி இலக்கியமாம் பெரியபுரா
...ணம்அஃதொன்றே, பண்பார்ந் தோங்கி
திறஞ்சேர் தமிழகக்காப் பியம்எனும்சீர்
வியன்பெருமை விளங்கி நிற்கும்!

—ந. ரா. முருகவேள்

# திருமயிலைத் தல புராணம்

## (முற்றொடர்ச்சி)

இந்த வளம் மேவிய எழிற் பொதிய வெற்பிற்
சந்தன வனத்திரள் ததைந்து உறையும் நாப்பண்
சுந்தர மணிக்கனக சோதி தவழ் கோயில்
அந்த அயனும்புகழ அங்குளது ஒன்று அம்மா (17)

அக்கனக மாளிகையில் அம்பொன் மணிஆரம்
தக்கபல வெங்கதிரும் தண்கதிரும் ஒன்றாய்
மிக்கஒளி கக்கும் அரிவெந் தவிசின்மீதே
புக்கு இரவிமேல் திகழ் புராரிதனை மான (18)

கண்டுஉவகை கொண்டவர்கள் கள்ளவினை தள்ளும்
புண்டரிகம் அன்னஇரு பொன்னடிகள் மின்ன
எண்தவிர அண்டநிரை ஈற்றும் அழிவற்றே
மண்டும்ஒளி விஞ்சு அரையின் வற்கலை வயங்க(19)

வித்துரும வெற்பின் நடுமேவி விளையாடும்
புத்தமுதம் உற்ற கிரணக் குழவிபோலச்
சுத்தஒளி பெற்று அருகு தூங்கருவி போல
நித்தன் அருள்நீறு ஒளிமுந்நூலும் உரம்நீட (20

ஆழிமுழுதும் கவரும் அங்கையின் மருங்கே
வாழி அருள்ஓது சிவமாலை பொலிவெய்த
ஊழி முதல்வன் கணில்உதித்த மணிமாலை
சூழ்இரு புயக்குவடு துன்அழகு மன்ன (21)

ஆரண சிவாகம புராணம்முன் அனைத்தும்
பூரண மதிக்குள் வளர்வபோல் வதனத் தோங்க
ஏர் அணியுறப் பெருகி இன்ப நயனத்திற்
சீர்அணி அருட்சலதி சீத அலைமோத (22)

சிந்துற நிறக் கனக தேசொளி எந்நாளும்
தந்திடு சட்குண்டலமும் தாழ்குழையின் ஆடச்
சுந்தர மதிக்குழவி தோன்றி ஒருமூன்றாய்
வந்த நிரைஎன்ன நுதல்நீற்று ஒளிவயங்க (23)

மருந்து அமரருண்ண விடம்உண்ட சிவன்மன்னும்
இருங் கயிலைமேல் அமர்இனன் பொலிவு மான
அருந்தவ வெண்ணீறு அணியவ் அங்கம்முழுதெங்கும்
தரும் பவளமேல் உயர்சடாமுடி தயங்க (24)

நாதம் முதலாய கரணங்கள் கெட நண்ணும்
போதமுடனே தமது போதம்அற வாழும்
வேத முடிவாய பரவீடுஅருள் மெய்ஞ்ஞான
மாதவ அகத்திய மகாமுனி இருந்தான் (25)

தாழ்இனிய வேணிஅரன் தாள்கருதி ஒன்றாய்
ஆழி முழுதுண்ட முனி அங்குஉறையும் வேலை
ஏழ்உலகில் இல்லதொரு ஏம இறும்பூது
வாழி உலகுய்ய அவன்வந்த வகைசொல்கேன் (26)

அண்டம் முழுதும் தரும்அரன் திருவடிக்கீழ்த்
தொண்டினில் உயர்ந்தவர்கள் தூய்மையுடன்வாழ் வார்
கண்டிகை வெண்ணீறு அளவில் காதலுடன்பூண் டார்
தண்டினொடு குண்டிகை தரித்திடு கரத்தார் (27)

பின்னு சடிலத்தர் அருள்பெய்யும் நயனத்தார்
மன்னும் அரைமீது இனிய வற்கலை புனைந்தார்
மென் நல்உயிர் வீடும்என மெல்லென நடப்பார்
எந்நிலமும் எண்டிசையும் எய்தும் இசையுள்ளார் (28)

செங்கனக வெற்பினொடு சேண்இழியும் நாளும்
தங்கள் விரதத்தில் ஒருசற்றும் அழியாதார்
மங்குலுடன் இந்நிலம் வானுலகும் ஒப்பப்
பொங்குவளம் ஈந்திடினும் பொய்ம்மை உரையா தார் (29)

இத்தகைய மாமுனிவர் எண்ணிலர் திரண்டே
அத்திரி அடர்த்த தவன்ஆலயம் அடைந்தே
வித்தக தவாதிப எனத்தொழுது வீழ்ந்தே
பத்தியுடன் உச்சிமிசை பா்தமலர் பூண்டே (30)

வேதமுதல் யாவையும் விளங்கு கரைகண்டாய்
நீதிஅறம் எவ்வகையும் நின்னிடை வளர்ப்பாய்
ஆதி இமவான் மகளை அங்கைதொடும் அந்நாள்
தீதுபடராத வகைதீர்க்க இவண் வந்தாய்! (31)

பூநெறி மறைத்து அகல்வான் முகடுஅறப்போய்
மேல்நெறி அடைத்து வளர் விந்தவலி வீழ்த்தாய்
மாநெறி வழாத சுரர்வாழ்த்த அவர்கட்காய்
மீன்எறி திரைப்புணரியும் பருகி விட்டாய்! (32)

புன்மொழி பகர்ந்து இகல்செய் பொய்ச்சமயமான
நன்மொழியின் நாரணனை நம்பன் உருச்செய்தாய்
மன்மொழி வடாதுமொழி மாதவர்கள் இன்சொல்
தென்மொழி எனப்புகல் திருத்தமிழ் அளித்தாய்! (33)

தளர்ந்தருள் பிரிந்து உயிர்கள் சார்பொருள் இதென்னும்
உளந்தனில் இருந்துணர் உமாபதியை அல்லால்
வளந்தரும் முகுந்தன் அயன் வானவர்கள் ஏனோர்
அளந்துஅளவில் நின்புகழை யார்புகழ வல்லார்? (34)

(வேறு)

என்று சீர்த்திகள் எடுத்தெடுத்து
ஏத்திநின்று இசைத்துத்
துன்று சன்ம வல்வினைப் பிணித்
துகள்அறத் துடைத்தே
இன்று யாமெலாம் பரகதி
எளிதினில் எய்த
ஒன்று நின்னிடை வினாதல்
உண்டென மகிழ்ந்துரைத்தார்! (35)

அந்த வாய்மைகேட்டு
அருந்தவன் அளவிலா மகிழ்ச்சி
புந்தி மேற்கொள நன்றுநன்று
இங்குநீர் புகன்றது
இந்த நல்லறிவு இன்றுநும்
உளத்தினில் எழுந்தது
எந்த மாதவப் பயன்கொல்
என்று, இசைமின்கள் என்றான்! (36)

என்று கும்பமா முனிவரன்
எடுத்து இயம்புதலும்,
இன்று யாமெலாம் இழைத்திடும்
தவம் முடிந்திடும்நாள்,
நன்று நன்றுஎன உவகையங்
கடல்புகும் நலத்தால்
வன்திறத் தவமுனிவரர்
யாவரும் வகுப்பார்! (37)

ஏதம் ஆற்றிய எண்ணிலா
உயிர்களுக்கு இரங்கிக்
காதல் உற்றவர் கரும
பேதங்களைக் கருதி,
ஆதிஅந்த பேரண்டங்கள்
அளப்பில; அதனுள்
தீது அகற்றிடும் பிருதிவி
அண்டத்தின் திறனில்; (38)

அளவில் அற்புதம் படைத்திடும்
இந்த அண்டத்தின்
வளம் மிகுந்த இவ்வகில லோகத்தின்
மண் வரைப்பின்
ஒளிதரும் பொன் மாமேருவில்
தென்புடை உலவித்
தெளியில் ஐம்பது கோடி
யோசனையதாய்த் திகழும்! (39)

பாச வேதனை பறித்துஅருள்
பதித்திடும் பரமாம்
ஈசன் வாழ்தலம் எண்ணில;
ஆயினும் இதனுள்
மாசுகாய்ந்து அருள் முத்தியை
எளிதினில் வழங்கும்
ஏசில் அற்புதத் தலம்எமக்கு
இசையென இசைத்தார் (40)

விண்டு மாதவர் மொழிதரக்
குறுமுனி விளம்பும்;
பண்டு உமைக்கு அரன் அளித்ததோர்
பதியுண்டு, அப்பதியைக்
கண்டு போற்றினும், அதன்புகழ்
கேட்பினும், கருத்துட்
கொண்டு முன்னினும், உயர்கதி
அக்கணம் கொடுக்கும்! (41)

தன்னையே தனக்கு இணையதாய்
உடைய இத்தலத்தை,
என்னை ஆளுடை நாயகன்
அறுமுகத்து இளையோன்,
முன்னைநாள் எனக்கு அளித்தது;
கதிபுக முனிகாள்
மன்னும் ஈரெட்டில், ஐந்தினில்,
முதன்மையாய் மருவும்! (42)

(வேறு)

தில்லை திருவெண்காடு காசி காஞ்சி
திருவானைக்கா மதுரை திருக்காளத்தி
மல்லலுறும் மறைக்காடு சோமநாதம்
மருவும் மந்தராசலம் சீர்ஆலங்காடு
எல்லையில் நற்கிரி பழைய திருக்கோகன்னம்
இராமநாதம் மயிலை ஈரெட்டாகும்;
தொல்லை மறை இங்கிவையுள் அதிகமாகச்
சொல்லும் ஐந்துநகர், வியாதன் சொற்ற
தாமால் (43)

(வேறு)

ஆயவை காஞ்சி காசி
அழகுறு திருக்காளத்தி,
நாயகன் நடனம்செய்யும்
நலந்தரும் தில்லைமூதூர்,
தூய மாயூரம் ஆகும்;
சொற்றரும் இவையுள் நன்மை
ஏயும் மாயூரம் முத்தி
எளிதினிற் கொடுக்கும் மாதோ! (44)

(பொதியமாமலைச் சருக்கம் முற்றிற்று).
சருக்கம் நான்குக்குத் திருவிருத்தம் 137.

## தல விசிட்டச் சருக்கம்

(வேறு)

பரகதி எளிதின் எய்தற்கு
இனியதோர் பதிஉண்டு என்றே
அரனை உட்கொண்ட காட்சி
அகத்திய முனிவன் கூற,
வரதவ முனிக் குழாங்கள்
மகிழ்ச்சியது கடலின் மூழ்கிக்
குரைகடல் முழக்கங் காட்டிக்
குணலையிட்டு அடியில் தாழ்ந்தார்! (1)

தாழ்ந்தெழுந்து உவரி உண்ட
தவாதிப, சனன வாரி
வீழ்ந்து வெந்நிரையத்து ஆழ்ந்து
மெலிவுறாது, அருளின் வாளால்
போழ்ந்தனிர் பிறவித் தெவ்வைப்
புனித வீடு அடைந்து இன்பார்ந்து
வாழ்ந்து அடியேங்கள் உய்ய
மற்றதை வகுத்திர் என்றார்! (2)

அளவிலா அருளால் கும்ப
முனிவரன் அறைவன் எண்ணிக்
களபமா முலையாள் பங்கன்
கபாலிமா நகரம் நோக்கிப்
புளகம்மேற் கொள்ள ரோமம்
பொடித்திட விழிநீர் சிந்த
உளம்நெகிழ்ந்து உருகத் தெய்வ
ஓவியம்போல் அங்கு உற்றான் (3)

நெடிது பேரருளின் வாழ்ந்து
மீண்டும் அந்நிலை வழாதுஅங்கு
அடிதொழும் முனிக்குழாங்கள்
அலர்திரு முகங்கள் நோக்கி
முடிவில் அற்புதங்கள் சேர்ந்த
முதுபதிப் பெருமை முற்றும்
கடிதினில் தொகுத்துச் சேரக்
கழறுதும் கேண்மின் என்றான் (4)

கங்கையஞ் சடிலத் தண்ணல்
கழறிய புராணம் தன்னுட்
பொங்குசீர் படைத்த சைவ
புராணத்தின் உயர்ந்த தானம்,
இங்கிது என்று அதன்சீர் கோடி
உருத்திர எழிற்பேர் மேய
சங்கிதை விரித்துக் கூறும்;
அதனையான் சாற்று கின்றேன்! (5)

### (வேறு)

எண்தவிரும் உயிர்களும் எவ்வுயிர்க்கும் மேலாய்
இலங்குசிவம்போல் எப்பதிக்கும் மேலாய்த்,
தண்தரள ஒளிபரப்பும் புனித வெள்ளிச்
சயில ரூபம் தனது ரூபம்ஆகித்,
தெண்திரை ஆடைக் கொடி தன்திலகமாய், மெய்த்
தேவர்கட்கு ஆரருள் அமிர்தாய்ச், சிறப்பின் தேவர்
அண்டருக்கும் பிணியறுக்கும் மருந்தாய் வைகும்
அதன்நாமம், மயிலைநகர் ஆகும் அன்றே(6)

இமையாத நாட்டமுள சுரர்கள் முன்னா
இவ்வுலகில் மேய சராசரங்கள் ஈறா
உமைபாகன் மருவும் அதன் எல்லை தன்னில்
ஒருகணப்போது இவ்வுயிர்கள் உறையப்பெற்றால்,
சுமையான செடிஉடலைத் தீர்க்கும் சீரூர்,
சுகபரானந்த வெள்ளத்து அழுத்தும் பேரூர்,
அமையாத பெருங்காதல் அளிக்கும் மூதூர்,
அதன்நாமம் மயிலைநகர் ஆகும் அன்றே! (7)

எண்ணரிய மாதவத்தால் அதன்கண் வந்தே
இறந்தாலும் பிறந்தாலும், யாவரேனும்
நண்ணிஅவண் உறைந்தாலும், அதன்நாமத்தை
நாவினால் அறைந்து ஒருகால் நவிற்றினாலும்,
கண்ணகன் ஞாலத்தில் எவ்விடத்து உற்றேனும்
கருத்தில் அதைநினைந்தாலும், கரிசுதீர்த்தே
அண்ணல் திருவடி அதனை அளிக்கும் மூதூர்,
அதன்நாமம் மயிலைநகர் ஆகும் அன்றே! (8)

இப்பதியை வானவர் இயக்கர் அசுரேசர்
செப்பரிய கின்னரர்கள் கிம்புருடர் சித்தர்
ஒப்பில் வசுதேவர் உடன் உரகர் அவுணேசர்
தப்பில் அருமாதவர்கள் சாரணர்கள் ஆனோர் (9)

வென்றிகொள் மருத்துவர்கள் விஞ்சையர்கள் வெய்யோர்
துன்றுசுதை வெண்கதிர்கள் தும்புரு சுரேசர்
வன்திறல் தரும் பிரமர் மாயர் இவர்எல்லாம்
என்றும் இரவும் பகலும் ஏத்துவர் விழைந்தே (10)

மூடிய சடைக்கடவுள் முன்சொல் மறையும், பின்
பாடிய சிவாகமமும், பல்கலையும், சத்த
கோடி மனுவும், தவள கோகனக கோயில்
நீடிய கலைக்கொடியும், நின்று ஒளிரும் அங்கண்! (11)

தேங்கிய மலர்ப்பொழில்கள், தேவர் உலகிற்போய்
ஓங்கி அவண் மேய தருவோடு அமர்இழைக்க,
வீங்கிய நெடுஞ்சிகர வெள்ளி அசலத்தின்
ஆங்கு உமைதனக்கு அரன்அளித்த பதிஈதாம்! (12)

தேசிகன் மனைக்குறுகு தீமை, அருள்அற்றே
பூசுரனை அட்டவினை, பொன்கவர் களங்கம்,
மாசுபடு பொய் மதுஅருந்தும் வினையாவும்,
நாசமுறும் அந்நகரை நண்ணுமுன் அம்மா! (13)

### (வேறு)

சண்ட வெங்கதிர் பரப்பியே இருள்அடும்
தபனர்கள் பல்கோடி
மண்டு பேரொளி தரும்துகிர்க் கிரியின்பால்
வளர்மலர்க் கொடிபோல
வண்டுலாம் குழற் கற்பகக் கொடி எனும்
மடவரல் ஒருபாகத்து
அண்டர் நாயகர் கபாலிநாயகர் மகிழ்ந்து
அமர்ந்தது அப்பதி தானே. (14)

இரவி ஆயிரம் கோடி ஒன்றாய்த்
திரண்டு இலகு பேரொளி மான,
வரதனார் சிவலிங்க ரூபம்கொடு
மயிலையில் உறைகின்றான்,
விரவியே தொழுவார் வினையாவையும்
வீடிடும் வீடாத
பரமஞானமும் வெளிப்படும் முக்தியும்
பலிக்கும் அவ்விடை தானே! (15)

குலவு தெண்திரை உடுத்த பாரிடத்தினில்
குழுமிய உயிர்க்கெல்லாம்
நலமிகுந்திட, அவ்விடை அவ்விடை
நம்பன்முன் அருளாலே
அலகில் நற்சிவ லிங்க ரூபங்கள்கொண்டு
அமருவன்; இதுபோல
இலகு போகமும் முக்தியும் எளிதினில்
ஈகுவது அரிதாமால்! (16)

அண்டர் போற்றிடு புன்னையங் கானல்
இலிங்கத்தை அன்பால்முன்
கண்டு இறைஞ்சிடாக் கண்களும் கண்களோ
கண்களன்று; அதன்நாமம்
விண்டு உரைத்திடா நாவும் நாவன்று;
இவண்மேவிய திருமுன்பு
தெண்டு எனப் பணிந்து எழாத பொய்த் தேகமும்
தேகம் அன்று எனலாமே! (17)

ஊன்உலாவிய உயிர்க்குழுப் பலபொருள்
ஒருங்குடன் தெரித்து ஏற,
வான்உலாவிய சுக்கிரன் மெய்ப்பிணி
மாற்ற அத்தலம் நண்ணி
ஞானநாயகற் றொழுது அருச்சித்து
அருள்நலம் பெறும் அதனாலே,
வானுளோர் களும்சுக் கிரபுரியென
வழங்கும் அப்பதி தானே! (18)

கோல மலர்மேல் அயன்மால் இந்திரர்கள் அனந்த
கோடி கடவுளர் எவையும் கூட மடிந்திடவே
சால உலகங்கள் எலாம் பிரளயம் கோத்திடும்நாள்
சாராது அப்பதி; இனிது சத்தியம் சத்தியமே;
மாலுறவே பொய்த்து வரும்கொடும் கலியும்எங்கும்
வருத்திடினும் அப்பதியின் மருங்கும் உறாது;
அதனால்,
சில விரதம் தருமம் தவம் செபங்கள் எளிதிற்
சித்திக்கும் முத்திக்கும் திடம்திடம் நிச்சயமே! (19)

### (வேறு)

இத்தலத்தின் உண்டு சத்த தீர்த்தம்;
ஒன்று அவைக்குளே
நித்த ஞான ரூபமாய்
நிகழ்ந்திடும்; அதன்பெயர்
சத்தி கங்கை; அத்தலம்
தனிற் படிந்து எழுந்தபேர்,
முத்தியின் சுகக் கடற்குள்
மூழ்கி இன்பம் மேவுவார் (20)

### (வேறு)

மண்ணோர் அறிய மாதவத்தோர்
மலர்க் கற்பக நீழலில் வாழும்
விண்ணோர் அயன்மால் சித்தர்கள்
சீர்மேவும் புகழ் விஞ்சையர்இவர்கள்
பண்ணோடு இயையும் மொழி மடவார்
பலரும் திரண்டு திரண்டேத்தித்
தண்ணோடு இலங்கும் அதன்கரையில்
ததைந்து ஆடுவர் எப்பொழுதினுமே(21)

கற்றார் பரவும் சதானந்தர்
கழறும் சாபத்தான் அதன்நீர்
வற்றா; பசு மண்டுகங்கள் ஆண்டு
மருவா; எயில்மூன்றும்
செற்றார் விளங்கும் மயிலைநகர்க்
குரவன் கங்கைதனில் மூழ்கப்
பெற்றார் அவரே ,பேறனைத்தும்
பெற்றார், மற்றுஆர் பெற்றாரே' (22)

முன்னார் புரமும் அவர்புரமும்
முருக்கும் தகையார் இருக்கும்மலர்ப்
பொன்னார் எழில்சேர் மயிலைநகர்
புரப்பாள் இருந்து உத்தரத்தில்என்றும்;
ஒன்னார் நடுங்க எரியுமிழும்
ஒண்சூலமும் எண்தோளும் அணி
மின்னார் கலனும் விழிமூன்றும்
விளங்க விளங்கும் பைரவியே! (23)

வாவும் கயற்கட் கற்பகப்பூ
வல்லிக் கொடியும் காபாலித்
தேவும் விளங்கும் மயிலைநகர்
செழிக்கும் வடதிக்கு இருந்தளிப்ப
மேவும் சேரார் உயிர்குடிக்கும்
விற்கொண்டு ஏந்தி விண்கிழியத்
தாவும் மதகுஞ்சரம் உகைக்கும்
சாத்தா எனும் வைரவர் உறைவார்!(24)

(வேறு)

நித்தனை அர்ச்சனை புரிதல் தவம்செபம் தியானம்
நீராடல் தர்ப்பித்தல் நிமலன் அடியார்க்குச்
சித்தம் மகிழப் பூசை செய்திடல் பூசுரர்க்குச்
செம்பொன் முதலாகிய தானங்கள் கொடுத்
திடுதல்,
பத்தியுடன் திருப்பணிகள் பண்ணல் வலம்பண்ணல்
பலமகங்கள் புரிந்திடுதல் பலிக்கும் இவை
யெல்லாம்
அத்தலத்தில் ஆற்றிடில் அங்குஒன்று அனந்தம்
ஆகும்
ஆற்றினவர் பவக்கடலை மாற்றினவர் ஆவர்
(25)

பொங்கு புகழ்மேய பிரமன் முடிமுன்தேடிப்
போத இளைத்து அம்முடிகாண்பான் புரியும்
தவம்போல்
செங்கமல மேல்எகினம் வாழ்மயிலை நகரில்
செறிந்திடும் மூர்த்திகளில் ஒருமூர்த்தியைப்
போற்றிடினும்,
தங்கள்வினைப் பவங்கள் தொலைத்தருள் பெறுவ
ரெனில், இச்
சகத் துயிர்கட்கு உயிர்ப்பிணிகள் தவிரவினை
யறுக்கும்
புங்கவனைச் சேவித்தோர் பேரின்ப வாழ்வைப்
பொருந்தி அருந்துவர்என நாம் புகழ்வது அதி
சயமே! (26)

பன்மார்க்க சமயத்துட் சுத்த சைவமும், சீர்
பாலிக்கும் முத்திகளில் சைவசித்தாந்தமும்,
மால்
துன்மார்க்கம் துறந்தழிக்கும் மந்திரத்துட் சிறந்த
தூய எழுத்தஞ்சும் உயர்ந்தோங்கும் அவை
போலச்,
சன்மார்க்கம் அளித்திடும் மாமயிலை நகர்ஈசன்
சத்திகங்கை எனும்தீர்த்தம் தவத்தில்நிற்கும்
மேலாம்
நன்மார்க்க முனிக்கணங்காள்! எளிது கதிபுகுத
நண்ணும் அருள்ஒன்றும் எனக் கும்பன் நவிற்றி
னானால்(27)

கும்பமுனி மயிலைநகர்ப் புகழ்முழுதும் தொகுத்தே
கூற அருந்தவர்கள் எலாம் குண்டிகை தண்டு
அயர்த்தே,
பம்புசடா முடிதுளங்கக், கண்ணருவி பாயப்
பரமானந்தக் கடற்குட் படிந்து கரைகாணாது
இம்பரின் முன்னாள் வருத்தும் சூர்உரமும் அன்
னான்
இடுஞ்சிறையும் அடுந்திறல்வேல் எறிந்தருளும்
அந்நாள்,
உம்பரெல்லாம் குமரேசன் திருவடிகண்டு அடைந்த
உவகையினும் பதின்மடங்கு அங்குற்ற அதி
சயமே! (28)

(வேறு)

ஆடினர் சிற்சிலர், ஆரணம் முற்றும்
பாடினர் சிற்சிலர், பாதம் முடிக்கண்
சூடினர் சிற்சிலர், துள்ளியெழுந்து அங்கு
ஓடினர் சிற்சிலர், உய்ந்தனம் என்றே! (29)

துளித்தனர் கண்மழை, சூழ்ந்து திரண்டே
விளித்தனர் எல்லிரும் மேவுதிர் என்றே,
களித்தனர் இன்பெனும் ஆர்கலி கண்டே,
குளித்தனர் நின்றுபு கூறுதல் உற்றார்! (30)

கண்ணன் மகிழ்ந்து கடைந்து அமுதத்தை
விண்ணவர் உண்ண விடுத்தது போல்யாம்
நண்ணரும் அந்நகர் நண்ணுபு வாழ
அண்ணல் அளித்ததை யார்செய வல்லார்? (31)

வெள்ளி விலங்கலின் வேள்தனை ஈன்ற
தெள்ளமு தத்தின் செவிக்கு அமிர்தமாக
வள்ளல் இசைக்கும் வகைவிரிவு எல்லாம்
மெள்ள எமக்கு விளம்புதி என்றார் (32)

வில்வலன் அன்று இளையோனுடன் வீய
வெல்வலன் அம்தவ வேந்தர்கள் வேந்து,
நல்வள மாதவர் தங்குழு நாடிச்
சொல்வளனோடு இவை சொற்றிடல் உற்றான்!(33)

கற்று இருளற்று ஒளிகண்டவர் கேண்மோ!
நற்றவளக் கயிலைப் பரன், நங்கைக்கு
உற்றிடு சாபம் உரைத்தருள் பான்மை
முற்றும் விரித்து, மொழிந்திடு வேனால் (34)

தலவிசிட்டச் சருக்கம் முற்றிற்று

ஆகச் சருக்கம் ஐந்திற்குத் திருவிருத்தம்—171.

—தொடரும்



# படிமக்கலை

திரு. வி. கணபதி ஸ்தபதி, B.A., B.T.,

மாமல்லபுரம்

**முன்னுரை :**

தமிழ்ப் பெருமக்கள் பேணி வளர்த்த கலைகளில் நாட்டியம், ஓவியம், சிற்பம், இசை, கவிதை ஆகிய ஐந்தும் அழகுக் கலைகளாகும். முன்னைய மூன்றும் கண்வழிச் சென்று உள்ளத்தை இன்புறச் செய்வன; பின்னைய இரண்டும் செவிவழிச் சென்று உள்ளத்திற்கு உவகையூட்டுவன.

கண்ணையும் கருத்தையும் கவரக்கூடிய ஒரு காட்சியை ஒருவன் காண்கிறான். அக்காட்சி புலன்வழிச் சென்று உள்ளம் என்ற திரையில் நிழலிடுகிறது, இன்ப உணர்ச்சி தோன்றுகிறது. இஃது உள்ளத்தை நிரப்பிப் பொங்கி வழிகிறது. இவ்வுணர்வை, தான் பெற்ற இன்பத்தை, பிறர் உள்ளத்தில் படைக்கும் ஆற்றலே கலை எனப்படும். உள்ளத்தில் பொங்கி வழியும் உணர்ச்சிப் பெருக்கைச் சுவை குன்றாது முறைப்படுத்தி எடுத்துரைப்பதால் கவிதை பிறக்கிறது; வரைவதால் ஓவியம் தோன்றுகிறது; வடிப்பதால் சிற்பம் உருவாகிறது.

**படிமம்:**

ஒன்றுக்கு ஈடாக அவ்வொன்றைப்போலவே அமையும் மற்றொன்றுக்குப் 'படி' என்று பெயர். அதாவது மூலத்தின் பிரதி, 'படி' யெனப்படுகிறது. இதனையே படிமம் என்றும் படிவம் என்றும் அறிஞர் கூறுவராயினர். ஆனால் கலைத்துறையில் இச்சொல் மிக ஆழ்ந்த கருத்தில் கையாளப்படுகிறது.

இயற்கை வடிவங்களையும் பிற காட்சிகளையும் உள்ளதை உள்ளவாறு உரைத்தலோ, உருவாக்குவதலோ கலைப்படைப்பு என்று நாம் கருதுவதில்லை. உள்ளதை உணர்ந்தவண்ணம் எடுத்துரைப்பதும் உருவகிப்பதும் கலைத்திறம் என்று கொள்கிறோம். எனவே உணர்வின் பிரதிபலிப்பே கலையென்பதாகிறது. விரித்துக் கூறின், மனத்திரையில் நிழலிட்ட உணர்வு மயமான காட்சியின் பிரதிபிம்பத்தையே படிவம் என்றும், படிமம் என்றும் நம் தமிழ் மக்கள் கொண்டனர். இதே பொருள்பற்றி, வடமொழி நூல்களும், 'பிரதிமா' என்றே இக்காட்சியை அழைக்கின்றன.

பொதுவாகப் படிமம் என்ற சொல்லைத் தெய்வத் திருமேனிகளைக் குறிப்பதற்கே தொன்றுதொட்டு வழங்கி வருகிறோம். எடுத்துக் காட்டாக, தொல் இலக்கியமான சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் தெய்வ வடிவைப் படிமம் என்றே இளங்கோவடிகள் குறிப்பிடுவதைக் காண்கிறோம்.

''மேலோர் விழையும் நூனெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்து
இமையவர் உறையும் இமையச் செவ்வரைச்
சிமையச் சென்னித் தெய்வம் பரசிக்
கைவினை முற்றிய தெய்வப் படிமத்து''

என்று சிலப்பதிகாரத்திலும், மேலும் கடைச் சங்கப் புலவர்களில் ஒருவராகிய சீத்தலைச் சாத்தனார் என்பார் தனது மணிமேகலை என்ற காப்பியத்தில்,

''அணியிழை யந்தரம் ஆறா எழுந்து
தணியாக் காதற் றாய்கண்ண கியையும்
கொடைகெழு தாதை கோவலன் றன்னையும்
கடவு ளெழுதிய படிமங் காணிய''

என்ற பாட்டிலும்,

''சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனைதொறும்
மையறு படிவத்து வானவர் முதலா''

என்ற அடியிலும், தெய்வ வடிவத்தைக் குறிக்கப் ''படிமம்'' 'படிவம்' என்ற சொற்களைக் கையாளுவதைக் காண்கின்றோம்.

கண்ணுக்கும் கருத்திற்கும் அகப்படாமல் அவற்றைக் கடந்து நிற்கும் பேரின்பப் பொருளின் பேரழகை அககண்களால் கண்டு, அவ்வுணர்வின் பிரதியாகக் கடவுட் படிமங்கள் அமைக்கப்படுகின்றன. கண்ணகியின் புற அழகை விடுத்து அக அழகையே மனத்திரையில் கண்டு, அவளது இனிய வடிவத்தைப் படிமம் என்றழைத்து; தெய்வத் தன்மையை இளங்கோவடிகள் அதில் ஏற்றிக் காட்டுகிறார். இன்று நாம் காணும் புத்தபடிமத்தின் வடிவழகு புத்தரின் இயற்கையான புற அழகு அல்ல. அஃது யாதெனில், புத்தர்தம் 'அகவழகின் புறத் தோற்றமே'. எனவே உருவமான பொருளின்

புற அழகைவிடுத்து அதன் அக அழகையும் அருவமான பொருளின் தன்மையைப் புறத் தோற்றத்தாலும் சித்தரித்துக் காட்டுவது படிமக்கலையின் சீரிய பணியாகும். இது தமிழகக் கலைகளின் பொதுவான-சிறப்பான மரபாகும் என்றால் மிகையாகாது.

**சிற்பக்கலை மரபு:**

தமிழகச் சிற்பக்கலை மரபின் சிறப் பியல்புகள் பலப்பல. அவற்றுள் குறிப்பிடத் தக்க ஒரு சிலவற்றை இங்கு நினைவு கூர்வோம்.

உணர்வின் பிரதி பிம்பமே உண்மைக் கலையாகும் என்ற கருத்து, சிற்பிகளின் உள் ளத்தில் நிலையாகப் பதிந்துவிட்டதனால், இயற்கைக் காட்சிகளையும் இயற்கை வடிவங் களையும் 'பிரதி' செய்வதை விடுத்து முற்றி லும் உணர்வு மயமாக மனக்காட்சிகளையும், கருத்துக்களையும், உண்மைகளையும், ஆராய்ச்சி முடிவுகளையும் சித்தரித்துக் காட்டுவ திலேயே தொன்று தொட்டுத் தமிழகச்சிற்பிகள் நாட்டம் கொள்வாராயினர். ஆனால், அதே நேரத்தில் இயற்கையை அறவே புறக்கணித்து முற்றிலும் புதுமையான வடிவங்களையும் காட்சிகளையும் அவர்கள் படைக்கவில்லை. அதற்கு மாறாக, இயற்கையோடு நெருங்கி உறவாடி, அதோடு இசைந்து, அதன் இயக்கங் களையும், சிறப்பியல்புகளையும் நன்கு ஆராய்ந்து, உணர்ந்து, அவற்றைத் துணைக் கருவிகளாகக் கொண்டு, அகத்தே தோன்றிய உணர்ச்சிகளை அழகு மிளிரப் படைத்துக் காட்டியுள்ளார்கள், நமது தமிழகச் சிற்பிகள் என்றால் மிகையான கூற்றாகாது.

வேறெந்த நாட்டுச் சிற்பக்கலை மரபிலும் காணமுடியாத ஒரு சிறப்பியல்பு நமது மரபிற்கு உண்டு. சிற்ப வடிவங்கள் எதுவாயினும் சரி. இயற்கை அமைதியில் காணப்படுவதில்லை. சிற்ப வடிவங்கள் நின்றாலும், அமர்ந்தாலும், கிடந்தாலும், எக்கருத்தை உணர்த்துவதானா லும், அவை ஆடற்கலைப் பாணியிலேயே அமைக்கப்படுகின்றன. ஆடற்கலை ஒரு பண் பட்ட கலை. உள்ளத்தில் தோன்றும் இயல் பான உணர்ச்சிகளை மிகத் தெளிவாகவும், சுவையோடும், நெஞ்சிலே நிலைத்து நிற்கும் வகையிலும் ஆடிக்காட்டும் கலை. இதனை முக பாவனைகளாலும், உடல் ஒடிவு, வளைவு, குழைவு, சுளிப்பு முதலிய அமைதிகளாலும் பிற வகை அபிநயங்களினாலும் சித்தரிக்கிறது. ஆடற்கலை வாயிலாகக் கருத்துக்கள் சுவை யோடும் முறையோடும் உணர்த்தப்படுவதை உற்று நோக்கித் தனது வடிவத்திலும் இது இடம் பெற வேண்டுமென்று முதன் முதலில் எச் சிற்பி உணர்ந்து சிற்பக்கலையில் இதனை ஏற்றினானோ அவன் உலகக் கலைமேதைகளில் ஒருவனாகக் கருதப்பட வேண்டுமென்றால், கலை உள்ளம் பெற்றோர் இதனை மறுக்க மாட்டார்கள். நமது சிற்ப வடிவங்கள் ஆடற் கலைப் பண்பினைப் பெற்றிருப்பதால் இவை தோற்றுவிக்கும் கலையின்பத்திற்கு எல்லையே இல்லை.

**சிற்பங்கள்:**

நாட்டிய இலக்கணத்திற்கேற்றவாறு சிற் பங்கள் இயற்றப்பட்டிருப்பதாகத் தோற்றத் தளவில் தெரிவதாயிருப்பினும், நாட்டிய இலக் கணத்தில் சீவனை உணர்ந்து கொண்ட சிற்பி, தனது தேவைக்கேற்றவாறும், இடத்திற்கேற்ற வாறும், செய்யப்படும் பொருளுக்கேற்றவா றும், உணர்த்தப்படும் கருத்துக்கேற்றவாறும், சிறுசிறு மாற்றங்களைக் கற்பித்துத் தனது படைப்புக்களை உணர்ச்சி மயமாக்குகிறான். சிற்பியின் மனம் எவ்வெவ்வாறு வளைகிறதோ, சுளிகிறதோ, நெளிகிறதோ, குழைகிறதோ அவ் வாறெல்லாம் அவனது வடிவங்கள் உருவெடுக் கின்றன. ஆடற்கலை வல்லுநர்கள் காட்ட முடியாத முகபாவங்களையும் உள்ளுணர்வு களையும் அபிநயச் சிறப்புக்களையும் மிகத் தேர்ந்த முறையில் சிற்பி அமைத்துவிட முடி கிறது. அவன் கருத்தழகையே வலியுறுத்துவ தால் மனித உடலுக்குரிய உடற்கூறுகளினால் விளையும் இடையூறுகளைவெல்ல வேண்டிய நிலை அவனுக்கு ஏற்படுகிறது.

எடுத்துக் காட்டாக, இறைவன் இப் பூவு லகைப் படைத்து, அதில் கோடி இன்பங்களை வைத்து நம்மிடம் வழங்கியிருக்கிறான். இஃது எக்காரணம் பற்றியென்று ஆராய்ந்த அறிஞர், இதனை நம்மீது இறைவன் கொண்ட கருணை யினாலும் அன்பினாலும் என்று கூறுவர். எனவே சிற்பியானவன் இறைவனைக் கருணை வடிவ மாகவும் அன்பின் உருவமாகவும் உணர்கிறான். கருணைக்கும் அன்பிற்கும் வடிவம் தரவேண் டிய பணி அவனைச் சாருகிறது. கருணை, அன்பு ஆகிய குணங்களே உருத்தரிக்குமானால், இவ்வுரு எங்ஙனம் இருத்தல் வேண்டும் என் பதை உள்ளூர ஆராய்ந்து, சிந்தித்து வடிவம் அமைக்கும்பொழுது மனித உடற்கூறுகள் பல இடையூறுகளைத் தோற்றுவிப்பதைக் காண் கிறான்.

கருணையும் அன்பும் மலர் போன்ற மென்மையான குணங்கள், நெஞ்சை உருக்கும் தன்மையன, ஆன்மாவின் இன்ப வடிவத்தை உணர்த்துவன. இவற்றை வடிவத்திலே தெளி வாகக் காட்டுவதற்கு மனித உடலின் நரம்பு களும் எலும்புகளும் தசைகளின் மேடு பள்ளங் களும் தடைகளாக நிற்கின்றன. இவை உட லின் விலங்குத் தன்மையைக் காட்டும் விறைப் பையுடையன. ஆகவே இவற்றைக் கட்டுப் படுத்தி, மறைத்து, அளவோடு உருண்டு, திரண்ட, சதைப்பற்றோடே கூடிய, உடலமைப் பில் வைத்துக் காட்டினால்தான் தன் கருத்து விளக்கம் பெறும் என்ற முடிவுக்குச் சிற்பி வரு கிறான். முகத்திலே மட்டும் கருணை அன்பு ஆகிய பண்புகள் தடையின்றி உடலெல்லாம் வழிந்தோடுமாறு காட்ட விழைகிறான். எனவே இயற்கை உடலமைப்பை, உடற் கூறுகளைத் தன் வயமாக்கி இன்னும் சொல்லப்போனால்- அடிமைப்படுத்திக் கருணை, அன்பு, சாந்தம், சிருங்காரம், மென்மை, முழுமை ஆகிய பண்புகள் பொருந்தியதாக வடிவத்தை இயற்றி விடுகிறான். இதற்குச் சான்றாகப் புத்தர் படிமங்களும், திருமாலின் வடிவங்களும், சிவ

மூர்த்தங்களும், தேவியாரின் இனிய வடிவங்களும் அமையப் பெற்றிருப்பதைக் கூறலாம். படிம உடற் கூறுகளும் படிம அமைதிகளும் இதுபோன்ற காரணங்களைப் பற்றி இயற்கை உடற்கூறுகளினின்றும் இயற்கை நாட்டிய அமைதியினின்றும் வேறுபடுகின்றன என்பதை உணர்தல் வேண்டும்.

சிற்பக்கலையில் மனித வடிவங்களை விடுத்துப் பல்வேறு விலங்குகளின் வடிவங்களையும் காணுகிறோம். வீரவுணர்ச்சிக்கு உவமையாக நாம் எடுத்துக் காட்டுவது சிங்கம் அல்லது புலியேயாகும். அசோகனின் சிம்மத்தூண்களும், சோழனின் புலிக்கொடியும், பல்லவரின் சிம்மக் கால்களும் இதை நினைப்பூட்டுகின்றன. விலங்கினங்களில் சிற்பக் கலைஞர்களின் கவனத்தையும் ஆர்வத்தையும் ஈர்த்தது சிம்ம வடிவமே.

சிற்ப உலகிலே நடமாடும் சிம்மவடிவம் இயற்கைச் சிம்ம வடிவத்தை ஏதோ ஓரளவு ஒத்திருப்பினும் பெருமளவு மாறுபட்டிருப்பதையே காண்கிறோம். இவ்வடிவத்தைப் பார்த்துச் சிம்மம் என்று உறுதியாகக் கூறுவோர் மிகக் குறைவு. இதனைக் கற்பனை வடிவம் என்று புறக்கணிப்போர் பலர் உண்டு. உண்மையாதெனில், சிற்பியானவன் இவ்வடிவத்தில் உடற் சாயலைக் காட்டி, அதற்கேயுரிய சிறப்பியல்புகளை வலியுறுத்திக் காட்டியுள்ளான். சிம்மம், உடலுறுதி மிக்கது; வல்லமை வாய்ந்தது; வேகமாய்ப் பாய்வது; பார்ப்போர் உள்ளத்தில் பய உணர்ச்சியைக் கிளறுவது; வீரம் மிக்கது. எனவே, வீரத்திற்குச் சின்னமான சிம்மத்தின் முழு வடிவத்தை அகத்திலே கொண்டு, அதன் சிறப்பியல்புகளைத் துலக்கமாகவும், நாட்டிய அமைதியிலும் காட்டுகிறான். இயற்றிய வடிவம் சிம்மத்தையும் நினைப்பூட்ட வேண்டும்; சிம்மத்தின் தன்மைகளையும் பிரதிபலிக்க வேண்டும். எனவே முறிந்த புருவமும், உருண்டு மிரட்டும் கண்களும், இளித்த வாயும், கோரைப் பற்களும், மடித்த உதடும், சுருக்கிய நுதலும் முகத்திலே முறைபட அமைத்து உடல் உறுதிப் பாட்டினைத் திரண்டு பருத்த சதைப்பற்றினாலும் புடைத்த நரம்புகளினாலும் வீரச் சுவைமிளிர இயற்றுகிறான். வீரத்தையும் பல உணர்ச்சியையும் வலியுறுத்த வேண்டியிருப்பதால், ''சிம்மத்தின் கால்களில் புலி நகங்களை வைத்துக் காட்டுக'' என ஒரு சிற்ப நூல் சுட்டிக் காட்டுகிறது. இத்தகைய வீர வடிவத்தில் எத்தனை அழகுதான் காட்டப்பட்டுள்ளது? சோகத்திலும், கோபத்திலும், பயத்திலும் இன்னும் பல்வேறு உணர்ச்சிகளிலும் புற அழகையும் சுவைபட அமைத்துக் காட்டிய நமது சிற்ப மரபை என்னென்று புகழ்வது?

### சிற்ப வேலைப்பாடுகள்:

சிற்ப அலங்கார வேலைப்பாடுகளில் பல விதமான இலைகள், காய்கள், பூக்கள், கொடிகள் ஆகியவற்றைக் காண்கிறோம். இயற்கையில் காணப்படும் செடி கொடிகளைக்கூட உள்ளதை உள்ளபடியே நம் மரபில் காட்டுவதில்லை. அதற்கு மாறாகச் செடி கொடிகளின் நெளிவு, சுளிவு, மடிப்பு, விரிப்பு, கோவை, அடுக்கு, மினுமினுப்பு, மென்மை, இயல்பான தன்மை, அதன் இயக்கங்கள் இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்து உணர்ந்து அவற்றை மனங்கவர் பாவனைகளில் சித்தரிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இத்துறையில் சிற்பியின் கற்பனை எவ்வளவு வளமாக இருந்தது என்பதை இவ்வடிவங்களை நேரில் பார்த்தே சுவைக்க முடியும். இவ்வடிவங்களைக் 'கருக்குகள்' என்றும், ''பாளை'' என்றும் தமிழகச் சிற்பிகள் குறிப்பிடுவார்கள். தமிழகச் சிற்ப மரபின் போற்றுதற்குரிய சிறப்பியல்புகளில் இதுவும் ஒன்றாகும். இது மட்டுமன்று, இயற்கையில் காணும் பறவை இனங்களில் சிற்ப வடிவங்கள், சிற்பியின் கரங்களிலே தனித்தன்மை வாய்ந்தனவாக வடிவெடுக்கின்றன.

நமது சிற்பிகள் சிற்ப வடிவங்களில் உடல் அழகைக் காட்டிய பாங்கே தனி. ஆடைகளை உடலோடு ஒட்டியவாறு அமைத்து, ஆடையின் எல்லையை மட்டும் உருட்டிக் காட்டி, உடல் திரட்சியை அதன் கவர்ச்சியை நன்கு வெளிப்படுத்துகிறார்கள். கலைத்துறையில் இது ஒரு மகத்தான சாதனை. அது மட்டுமல்ல. உடலுறுப்புகளுக்கு ஏற்றவாறு பொருத்தமான இடங்களில் கண்கவர் அணிகளைப் பூட்டி அழகு சேர்த்த முறையும் பாராட்டுதற்குரியதாகும். இவற்றுக்கெல்லாம் மேலாக, சிற்ப வடிவங்களின் தலைக் கோலங்களிற்றான் எத்தனை எத்தனை மனங்கவர் வகைகள்?

### நம்நாட்டு—மேலைநாட்டுச் சிற்பங்கள்:

நமது நாட்டுச் சிற்ப வடிவங்களுக்கும், மேலை நாட்டுச் சிற்பவடிவங்களுக்கும் நிரம்ப வேறுபாடு உண்டு. நமது சிற்ப வடிவத்தை ஒரு சிலர் தவறாகக் கருதுகிறார்கள். மனித உடலின் வெவ்வேறு உறுப்புக்களின் அழகை வெவ்வேறு மனித வடிவங்களில் பார்த்து அவ்வாறு தனித்தனியே கண்டு சுவைத்த உறுப்புக்களையெல்லாம் ஒன்று சேர்த்துக் கற்பனையாக ஒரு முழு வடிவத்தை உருவாக்குவதாக நினைக்கிறார்கள். இஃது ஒரு தவறான கருத்தாகும். மேலை நாட்டுச் சிற்ப வடிவங்கள் மனித உடற் கூறுகளை நூற்றுக்கு நூறு செம்மையாகக் காட்டி மனித அழகின் புறத்தோற்றத்தையே வலியுறுத்துகின்றன. பெண் தெய்வம் ஒன்றின் வடிவத்தை மிக அழகிய ஒரு பெண்ணின் வடிவமாகவே காட்டியுள்ளார்கள். இவ்வழகில் கூடுதல் குறைவு காணப்படின் அவர்களின் கண்களை அவை உறுத்துகின்றன. எனவே புற அழகையே காட்ட முயலும்பொழுது அதற்கு ஓர் எல்லையும் தோன்றி விடுகின்றது.

### கலைத்திறன் :

நமது சிற்ப மரபு காவிய மரபை ஒட்டியது. ஒவ்வோர் ஆண், பெண் வடிவத்தையும் ஒவ்வொரு காவியம் என்றே கலா ரசிகர்கள் கூறுவார்கள். எடுத்துக் காட்டாக, ஒரு கவிஞன் பெண் ஒருத்தியின் இனிய வடிவத்தைக் காணும்

பொழுது அத்தோற்றம் அவனது உள்ளத்தில் இன்ப உணர்வைத் தோற்றுவிக்கிறது. அதனைப் பிறர் உள்ளத்தில் ஏற்றிக் காட்டுவதற்குப் பொருத்தமான சொற்களைக் கொண்டும், உவமை அணிகளைக் கொண்டும், இசைத்துக் காட்டுகிறான். இதே முறையில் சிற்பியும் தன் உணர்வில் நிற்கும் வடிவத்தைக் கல்லிலே ஏற்றி அதே உவமை அணிகளை அவர் வடிக்கும் வடிவத்திலும் பொருத்தி, தான் அருவமாக உள்ளத்தில் கண்ட வடிவத்திற்கு உருவம் அளிக்கிறான். கவிஞனின் உள்ளத்தில் தோன்றியது ''அருவம்''. இதற்கு அவன் கொடுப்பது 'சொல் வடிவம்'. சிற்பியின் உள்ளத்தில் தோன்றியது 'அருவம்'. இதற்கு அவன் கொடுப்பது 'கல் வடிவம்'. இவ்விருவரும் தங்கள் உள்ளத்திலே கண்டு இன்புற்ற பெண் வடிவத்தின் முகத்தை முழு மதியிலும், நெற்றியைப் பிறையிலும், புருவத்தை, கண்களை மலர்களிலும், கூந்தலை மயில் தோகையிலும், இடையைத் துடியிலும், தொடையை யானையின் துதிக்கையிலும், இங்ஙனம் ஒவ்வோர் உறுப்பையும் ஒவ்வோர் இயற்கை வடிவத்திலே காணுகிறார்கள். இவற்றைச் சிற்ப வடிவத்தில் சிறப்பாக அமைத்துக் காட்டுவதே நம் நாட்டுச் சிற்பக்கலை மரபின் ஒப்பற்ற செயலாகும். இங்ஙனம் ஒவ்வொருவனும் வெவ்வேறு விதமானஇயற்கைப்பொருள்களிலும் காணவும் கூடும். இதனால் வடிவங்களும் வெவ்வேறாக மாறும் தன்மை பெறுகின்றன. எனவே நமது கலைமரபிற்கு எல்லையென்பது இல்லை. கற்பனை விரியும் தன்மையுடையது. மேலும் தத்துவக் கருத்துக்களுக்கும், சமய உணர்வுகளுக்கும் வடிவம் காண்பதில் சிற்பக்கலை சிறந்த பணி செய்கிறது. இக்கருத்துக்கள் எல்லையின்றி விரிந்து உயர்ந்து செல்லத்தக்கவை. இத்துறையைச் சிற்பக்கலை பற்றிக் கொண்டதால் இத்துறை விரிவும் உயர்வும் பெறுவதாயிற்று. பல நூற்றாண்டுகளையும் கடந்து நமது சிற்பக்கலை வளர்ந்து ஓங்கியதின் இரகசியம் இஃதே.

## முடிவுரை:

இத்தகைய அரும்பெரும் சிறப்பியல்புகள் வாய்ந்த நமது சிற்பக்கலை, மக்கள் கலையாகும். எவ்வாறெனில் சமுதாயத்தின் வாழ்க்கை நெறிகளையும், உயர்ந்த நோக்கங்களையும், பண்பாட்டின் சிறப்பையும், இக்கலை பிரதிபலிக்கிறது. தெய்விக வடிவங்களிலும், அவற்றின் திருவிளையாடற் காட்சிகளிலும் இப்பூவுலகின் இலட்சிய நாயக, நாயகிகளையே சிற்பிகள் சித்தரிக்கிறார்கள். தனிப்பட்ட தங்கள் உணர்ச்சிகளை மட்டுமல்லாது, சமுதாயத்தின் உணர்ச்சிகளையும், உள்ளக்கிடக்கைகளையும் சிற்பிகள் சமைப்பதால், பண்டைப் பெருமக்கள் சிற்பக் கலையைத் தங்கள் கலையாகவே கருதி ஆர்வத்தோடு பேணி வளர்த்தனர்.

---

# திருவருளை மறவாத மதியருள வேண்டும்

திருவருளை மறவாத மதியருள வேண்டும்
கருவடைய நினையாத கதியருள வேண்டும்
திருகிமன மருளாத அறிவுபெற வேண்டும் பெருமானே

தினமுனது புகழ்பாடி உளமகிழ வேண்டும்
தனமுதவி மிடிதீர வலமகிமை வேண்டும்
திருடரொடு பழகாத தெளிவுடைமை வேண்டும் அருளாளா

தருமமுறை வழுவாத உறுதிபெற வேண்டும்
குருவருளு முபதேச நிறைவுபெற வேண்டும்
தனியுடைமை கருதாத பொதுவுடைமை வேண்டும் பழிபாவம்

தருகொடிய வினையரவு மறவொழிய வேண்டும்
பொருணிலவு கலையாவு முரிமைகொள வேண்டும்
தகைமைமிகு மடியார்க ளுறவுகொள வேண்டும் சிவைபாலா

தெருமனைக ளகலாது னருள்பரவ வேண்டும்
புருடர் மனைவியர்காதல் பொலிவடைய வேண்டும்
தெனைகழை கமுகுவாழை செழுமைபெற வேண்டும் பலதான்யம்

திசைகடொறு மலிவாகி விலைகுறைய வேண்டும்
பசையுளவ ரெளியார்கள் பசிகளைய வேண்டும்
திறலுடைய அருளாளர் அரசியல வேண்டும் உழவாளி

கருகியுடல் மெலியாது கவலையற வேண்டும்
பெருகிவரும் நதிபோலும் நலமிளிர வேண்டும்
கடமையது தவிறாத திடவலிமை வேண்டும் வளம்நீர்மை

கமகமென மணம்வீசு களபமலர் பூண்டெம்
சமயநெறி வழுவாத அடியவர்கள் வேண்டும்
கருணைபொழி கணநாத பழநிமலை யாண்டும் வளர்தேவே!

—இராம சுப்பிரமணியம், மதுரை.

# நான் கண்ட சாதுக்கள்

''மருத்துவப் பேரறிஞர்''
டாக்டர் திரு இரத்தினவேல் சுப்பிரமணியம் அவர்கள்,
B.Sc., M.D., F.R.C.P.(London), F.C.C.P. (U.S.A.), F.A.M.S

சிறு வயதிலிருந்தே எனக்குப் பல பெரிய மகான்களைத் தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது. எனக்கு எட்டு வயது இருக்கும்பொழுது, திருப்புகழ்ச் சாமியார் என்ற ஒருவர் அவ்வப்பொழுது வீட்டுக்கு வந்துபோவார். அவருக்கு அந்தப் பெயர், அவர் திருப்புகழ் பாடுவதனால் ஏற்பட்டது. இனிமையான குரலில், நன்றாகப்பாடுவார். கேட்பதற்கும் ஆனந்தமாக இருக்கும். இரவு காலத்தில் வந்தாரேயானால், அவர் பாட ஆரம்பித்த உடனேயே, நான் தூங்கி விடுவேன். ஒரு சமயம் அவர் வந்தபொழுது வீட்டிற்குள்ளே சென்று, என் பாட்டியார் ஒருவரிடம் திருப்புகழ்ச் சாமியார் வந்திருக்கிறார், அவருக்குச் சாப்பாடு போடவேண்டும் என்று சொன்னேன். அந்தப் பாட்டி என்னைப் பரிசோதனை செய்வதற்காகச் சாப்பாடு இல்லை என்றார். அதற்கு நான் ''என் சாப்பாட்டை அவருக்குப் போட்டு விடுங்கள்'' என்று சொன்னேன். அதற்கு என் பாட்டி, ''உன் சாப்பாடு எவ்வளவு? அது எப்படி அந்தச் சாமியாருக்குப் போதும்'' என்று சொல்லி, என்னை வேடிக்கை செய்துவிட்டு, ''நீ போய்ப் பாட்டைக் கேள். அதற்குள் சாப்பாடு தயாராகி விடும்'' என்று சொல்லி அனுப்பிவைத்தார். வாஸ்தவத்தில் வீட்டில் சாப்பாட்டிற்குப் பஞ்சம் ஒன்றும் கிடையாது. ஏனென்றால் எப்போது பார்த்தாலும், வீட்டில் இருப்பவர்கள் அல்லாமல் குறைந்தது நாலைந்துபேர் வெளிமனிதர்கள் சாப்பிடுவது வழக்கமாக இருந்த காலம் அது!

எனக்குச் சுமார் 14 வயது இருக்கும். என்னுடைய பெரியப்பா மகன், என்னைவிட ஆறுமாதம் வயதில் மூத்தவர். எங்கள் இருவரையுமே எங்கள் பெரியோர்கள், மணி என்றுதான் கூப்பிடுவார்கள். அப்பொழுது மதுரையில் கட்டுக்குளம்சாமி அல்லது மாயாண்டிசாமி என்று ஒரு சாமியார் இருந்தார். அவர் ஓரிடத்திலும் 24 மணிநேரம் தங்கமாட்டார். தனுஷ்கோடியிலிருந்து விழுப்புரம் வரையில் சுற்றிக் கொண்டே இருப்பார். சாதியில் தன்னைக் குயவர் என்று அவர் சொல்லிக் கொள்வார். ஒற்றை மாட்டு வண்டியில் அவர் பயணம் செய்வார். அந்த வண்டியில் ஒரு வண்ணான் சால் இருக்கும். வண்டி போய்க் கொண்டிருக்கும்பொழுது ஜனங்கள் அவர்களே வந்து அந்தச் சாலில் கொஞ்சம் சாதத்தைப் போடுவார்கள். ஒரு வீட்டில் தயிர் சாதமாக இருக்கும். ஒரு வீட்டில் குழம்பு சாதமாக இருக்கும், இன்னொரு வீட்டில் காய்கறிக் கூட்டாக இருக்கும். இப்படிப் பலவிதமான உணவைக் கொண்டுவந்து சாலில் போடுவார்கள். அந்தச் சால் நிறைந்த உடன், வண்டியை நிறுத்திவிட்டு ஜனங்களின் உதவி கொண்டு, சாலை வண்டியிலிருந்து இறக்கிச் சாலையின் நடுவிலேயே வைத்து விடுவார். அதை அந்தச் சாமியார் தம் கையால் கலந்து, ஆளுக்கு ஒரு சிறிய உருண்டை கொடுத்துவிட்டு, தாம் மட்டும் பெரிய உருண்டையாகச் சாப்பிடுவார். ஒரு நாளைக்கு ஒருமுறைதான் சாப்பிடுவார். அந்த உணவைப் பிரசாதம், பிரசாதம் என்று சொல்லிக்கொண்டு, ஜனங்கள் போட்டிபோட்டு வாங்கிச் சாப்பிடுவார்கள். பிறகு யாராவது ஒருவர் குடிநீர் கொண்டுவந்து அந்தச் சாமியாருக்கு ஊற்றுவார்கள். அதைக் கொண்டு சாலைக் கழுவி, அந்த நீரை அனைவர்க்கும் வழங்கி, தானும் குடிப்பார். என் சகோதரர் மணி, ''கட்டுக்குளம் சாமியார் நாளைக்கு மதுரை வருகிறார் .ஒரு பெரியவர் வீட்டில் நாளைக்குத் தங்கப் போகிறார். நாம் போய்ப் பார்க்கலாம்'' என்றார். சரி என்று சொல்லி, நாங்கள் இருவரும் அதிகாலையில் எழுந்து, எங்கள் காலைக் கடனை முடித்துக் கொண்டு, போய்ச் சேர்ந்தோம். சுமார் காலை 8 மணிக்குத்தான் அவர் வந்து சேர்ந்தார். முன்னாள் சால் நிறையாததன் காரணமாக மதுரைவரும் வரையில் சாதம் வழங்கப்படவில்லை. 8 மணிக்கு அந்தப் பெரியவர் வீட்டில் வண்டி வந்து நின்றவுடன், தெருவிலேயே சாலை இறக்காமல், வீட்டில் கொண்டு வந்து வைத்தார்கள். வீட்டிற்குள்ளே பெரிய முற்றம். குறைந்தது 150 அல்லது 200 பேர் கூடியிருந்தார்கள். வழக்கம்போல் சாமியார் கையைப் போட்டு, உணவுகளைக் கலந்து பிரசாதமாகத் தந்தார். ஜனங்கள் போட்டி போட்டுக்கொண்டு அதை வாங்கிச் சாப்பிட்டார்கள். எனக்கு அது மிக அருவருப்பாக இருந்தது. நான் அதன் கிட்டேயே போகவில்லை. என் சகோதரர் மட்டும், போட்டி போட்டுக் கொண்டு அந்த ஆகாரத்தை வாங்கிச் சாப்பிட்டார். பிறகு வழக்கம் போல், சாமியார் அந்தச் சாலைக் கழுவித் தண்ணீரையும் வழங்கினார். எல்லாம் ஆனபிறகு ஜனங்கள் அவர் காலில் விழுந்து நமஸ்காரம் செய்ய ஆரம்பித்தார்கள்.

அப்பொழுது அவர் ஒருவரைக் கூப்பிட்டு நல்ல தேங்காய் ஒன்று வாங்கி வா என்றார். இன்னொருவரைக் கூப்பிட்டு நல்ல கனிந்த

வாழைப் பழமாக 4 வாங்கி வா என்றார். பிறகு வீட்டிலுள்ள சமையல்காரரைக் கூப்பிட்டு, நல்ல சுத்தமான வெல்லம் இருக்கிறதா? என்று கேட்டார். ஆமாம் இருக்கிறது என்று சொல்லி, அந்தச் சமையற்காரர் எடுத்துக் கொண்டுவந்து காட்டினார். பிறகு அவரிடமே தேங்காயைக் கொடுத்து உடைத்துத் துருவிக் கொண்டு வா என்றார். பழங்களைக் கழுவி வா என்றார். ஒரு வாழை இலையையும் கொண்டுவரச் சொன்னார். பிறகு சுத்த ஜலமும் கொண்டு வரச் சொன்னார். ஜனங்கள் எல்லோரும் சாமியாரை ஆச்சரியமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஏனென்றால் அவர் எப்பொழுதும் யாரையும் எதுவும் கேட்டது கிடையாது. இது தான் முதன்முறையாக, அவர்கள் எல்லாம் அறிய அவர் கேட்டது. இருந்தாலும் அவரிடத்தில் இருந்த பக்தியும் மரியாதையும் காரணமாக, அவர் எதைக் கேட்டாலும், உடனே கொண்டு வந்தார்கள். எல்லாம் வந்து சேர்ந்த பிறகு, தன் கைகளைச் சுத்தமாகக் கழுவினார். பக்கத்தில் உள்ளவரிடம் என் கை சுத்தமாக இருக்கிறதா? சுத்தமாக இருக்கிறதா? என்று கேட்டார். பின்பு வாழை இலையைச் சுத்தமாகக் கழுவி, அதில் தேங்காயையும் பழத்தையும் வெல்லத்தையும் கலந்து, பிறகு சிறிது தேனும் நெய்யும் கலந்து, என்னைப் பார்த்து ''ஏ தம்பி! இங்கே வா'' என்றார். நான் அவர் அருகில் போனேன். அப்பொழுது என்னைப் பார்த்துத் ''தம்பி! நான் முன்னே கொடுத்த உணவு உனக்குப் பிடிக்கவில்லை அல்லவா?'' என்று கேட்டார். எனக்கு ஒரே ஆச்சரியம். ஏனென்றால், நம் வீட்டில் பத்து விருந்தாளிகள் வந்தாலே, யார் சாப்பிட்டார்கள்? யார் சாப்பிடவில்லை? என்று நமக்குத் தெரியாது. அப்படி இருக்கும்போது 150, 200 பேர் கூடியிருந்த இடத்தில், நான் ஒரு சிறு வயதுப் பையன் சாப்பிடாததை அவர் எப்படிக்கவனித்தார்? என்று, நானும் அவரை ஆச்சரியமாகப் பார்த்தேன். அங்குக் கூடியிருந்த ஜனங்களும் ஆச்சரியமாகப் பார்த்தார்கள். உனக்கு இந்தப் பஞ்சாமிர்தம் பிடிக்கும் அல்லவா? என்று கேட்டார். நான் ''எனக்கு மிகவும் பிடிக்கும்'' என்றேன். ''என் தாயார் பிள்ளையாருக்குப் பூசை செய்யும்போது சில சமயங்களில் இந்தமாதிரி பஞ்சாமிர்தம் செய்து படைப்பார்கள். நான் அதைச் சாப்பிடுவதற்காகவே பூசை முடியும் வரை காத்திருந்து, அதை ஆசையோடு வாங்கிச் சாப்பிடுவது வழக்கம்தான்'' என்று சொன்னேன். அவர் சந்தோஷப்பட்டுக் கொண்டு, என்னிடத்தில் அந்தப் பிரசாதத்தைக் கொடுத்து, ''இந்தா! இதை இப்போது நீ சாப்பிடு'' என்றார். நான் மிகவும் சந்தோஷப்பட்டேன் என்றாலும், ஒருவித பயமும் எனக்கு ஏற்பட்டது. எல்லோருக்கும் எதிரில் நான் முன்பு சாப்பிடாததைத் தெரிந்து கண்டுபிடித்துக் கூறினாரே, அவருடைய மனம் அதனால் புண்பட்டிருக்குமோ? என்று எனக்குப் பயம் ஏற்பட்டது. அப்போது அவரே சொன்னார். ''தம்பி! ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு ஆகாரம் பிடிக்கும். உனக்கு இந்த ஆகாரம் பிடிக்கும். உன் அம்மா உனக்குச் சுத்தமான உணவையே ஊட்டி வளர்த்திருக்கிறார்கள். அதனால் உனக்கு அருவருப்பு ஏற்பட்டதே தவிர, என் மீது உனக்கு ஒன்றும் இல்லை'' என்று அவரே சொன்னார். எனக்கு அப்போதுதான் இந்த மாதிரி மகான்களிடத்தில் நாம் ஒன்றையும் மறைக்க முடியாது என்று விளங்கிற்று. கொடுத்த பிரசாதத்தைச் சாப்பிடாமல் முதலில் அவர் காலில் விழுந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தேன். அவர் அப்பொழுது சொன்னார். ''தம்பி ,உனக்குப் போகப் போக நேரமிருக்காது. ஆகையால் இப்போதே கந்தரனுபூதி, கந்தர் அலங்காரம் இந்த இரண்டையும் படித்து மனப்பாடம் செய்துகொள், அது போதும்'' என்றார். நானும் அதற்கு விடையாகச் ''சுவாமி, என் தகப்பனாரைப்போல் நான் கஷ்டப்படமாட்டேன். நான் சுக ஜீவியாகவே இருப்பேன். அதனால் எனக்கு நிறையச் சாவகாசம் இருக்கும்'' என்றேன். அதற்கு அவர் சிரித்துக் கொண்டே ''தம்பி, விதை ஒன்று போடச் சுரை ஒன்று முளைக்காது. உன் தகப்பனாருக்காவது எவ்வளவு கடினமான வேலை இருந்தாலும், வீட்டிற்கு வந்தால் ஓரளவுக்கு நிம்மதியாக இருக்க முடிகிறது. உனக்கோ என்றால் ஒரு காலத்தில் 24 மணி நேரமும் பற்றாது என்ற நிலை ஏற்படும். உணவு சாப்பிடுவதற்குக்கூடப் போதுமான அவகாசம் இருக்காது. அப்போதுகூட ஒருவன் வந்து உன்னை ஏதாவது கேட்பான். அந்தக் காலத்தில் நான் இருக்க மாட்டேன். ஆனால் அப்போது நீ என்னை நினைத்துக் கொள்வாய்'' என்றார். நான், அவர் சொன்னபோது, ''சாமியார் இப்படிச் சொல்கிறாரே, நமக்கு என்ன அப்படி சாவகாசம் இல்லாமல் போய்விடப் போகிறது'' என்று நினைத்துக் கொண்டு அவரிடம் விடை பெற்றுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

இந்தச் சம்பவம் நடந்தது 1927ஆம் ஆண்டில். 1969ஆம் ஆண்டில் நான் சென்னை மருத்துவக்கல்லூரியில் முதல்வராக இருக்கும் போது, சாமியார் சொன்னதுபோலவே, என் வேலையின் தொந்திரவு காரணமாக இடைவிடாமல் ஓய்வின்றி எப்போதும் பலப்பல வேலைகள் இருந்துகொண்டே யிருக்கும். சாப்பிடும்போதுகூட, ஜனங்கள் என்னிடம் வந்து அதற்கென்ன செய்யலாம், இதற்கென்ன செய்யலாம் என்று கேட்டுக் கொண்டே இருப்பார்கள். அவர்களுக்கு நான் சாப்பிட்டுக் கொண்டேகூட, பதில்களைச் சொல்ல வேண்டியநிலை ஏற்பட்டது. அதாவது 42 வருடங்களுக்குப் பிறகு ஆகக்கூடியதை, அவர் முன்னோட்டமாகத் தெரிந்து சொல்லியிருக்கிறார்.

மற்றொரு முறை அவரைக் கண்டேன். அப்பொழுது என் கன்னத்தில் நாலைந்து வேனில் கட்டிகள் இருந்தன. அதை அவர் பார்த்துவிட்டு, ஒரு கொட்டாங்கச்சியில் சுண்ணாம்பும் விளக்கெண்ணெயும் கலந்து, அவர் கையினாலேயே எனக்குத் தடவினார். தடவி விட்டு ''அவசியம் இருந்தால் நாளைக்கும் போடு'' என்று சொல்லிக் கொடுத்தார். ஆனால் அதற்கு அவசியம் இல்லாமல், அன்று இரவே கட்டிகள்எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டன.

கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்;
கரடிவெம் புலிவாயையும்
கட்டலாம்: ஒருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்;
கட்செவி எடுத்தாட்டலாம்;
வெந்தழலின் இரதம்வைத்து ஐந்துஉலோகத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்;
வேறொருவர் காணாமல் உலகத் துலாவலாம்;
விண்ணவரை ஏவல்கொள்லாம்;
சந்ததமும் இளமையோ டிருக்கலாம்; மற்றொரு
சரீரத்தி னும்புகுதலாம்;
சலமேல் நடக்கலாம்; கனல்மேல் இருக்கலாம்;
தன்நிகரில் சித்திபெறலாம்;
சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
திறம்அரிது; சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

என்ற பாடலைச் சொன்னேன். அதற்குச் சாதாரண அர்த்தம் வேறு, அதன் உட்கருத்து வேறு என்று விளக்கம் சொல்லச் சாமியார் ஆரம்பித்தார். முதல் மூன்று வரியைச் சொல்லி முடிப்பதற்கு அரை மணி நேரம் ஆயிற்று. அப்பொழுது மதியம் 2 மணி ஆகிவிட்டிருந்தது. பக்கத்தில் உள்ள நண்பர் என்னைச் சீண்டினார். உடனே சாமியார் ஏன் அவரைச் சீண்டினீர்கள், உங்களுக்கு ஏதாவது வேலை இருக்கிறதா? என்று கேட்டார். அதற்கு நான் மதுரையில் ஒரு மருத்துவச் சங்கத்தில் பேச வேண்டிய வேலை இருக்கிறது. இப்பொழுது நேரம் 2 மணியாகிவிட்டது. கூட்டம் 4 மணியளவில் நடைபெறவுள்ளது. இப்பொழுதே புறப்பட்டால்தான் மதுரைக்குப் போய்ச் சேருவதற்குச் சரியாக இருக்கும் என்றேன். அதற்கு அவர், என்னைப் பார்ப்பதற்கு 1 மணி நேரமாவது ஒதுக்கவேண்டும். இவ்வாறு அவசரப்பட்டு வந்தால் பிரயோசனம் இல்லை என்றார். அதற்கு நான் அடுத்த முறைவரும்போது தங்களைச் சந்திக்கின்றேன். இன்னும் 2 மாதத்தில் கோடைக்கால விடுமுறையில் சந்திக்கின்றேன் என்று கூறினேன். அதற்கு அவர், நாம் சந்திக்க மாட்டோம் என்று சொன்னார். இருந்தாலும் எனக்கு நேரமாகிவிட்ட காரணமாக விடைபெற்றுக் கொண்டு சென்றோம்.

சுமார் 3 வாரம் கழித்துச் சாமியார் அடக்கம் ஆகிவிட்டார் என்ற தகவலைப் பத்திரிகை மூலம் நான் பார்த்தபோது, எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. நான் சாமியாரைச் சந்திக்கும்போது, வயது முதிர்ந்துவிட்டதே தவிர, இறக்கும் தறுவாயில் இருப்பார் என்று எண்ணவேயில்லை. இருந்தாலும் அன்றைய தினம், நான் பேப்பர் பார்த்தபோது ஒரே ஆச்சரியம். இப்படியும் தன் வாழ்க்கைக்கு முடிவு அறிந்து சொல்லக்கூடிய நிலையில் ஒரு பெரியவர் இருந்திருக்கிறாரே என்று நான் மிகவும் ஆச்சரியப்பட்டேன்.

---

# குற்றம் இகழாக் கொள்கையன்

இறைவன் அடியார்களின் குற்றங்களைக் காணாமல் இருப்பது மாத்திரமன்று, ஒரோவழி காண நேர்ந்தாலும், அக்குற்றங்களை நற்றமாகிய குணங்களாகவே கொண்டு மகிழ்ச்சியுறுவான். இஃது அவனது பெருங் கருணைத் திறத்தின் பெற்றியாகும். தம் மனைவி மக்களுடைய குற்றங்களைக் கண்டும் காணாதவர்கள்போல, உலகில் மனிதர்கள் பலர் இருத்தலைப் போலவும்; தம்மால் காதலிக்கப்படும் காமினியின் அழுக்கையும் வெறாமல் விரும்பும் காமுகரைப் போலவும்; கடவுள் தன் அடியவர்களின் குற்றங்களைக் குற்றங்களாகக் கருதுவதில்லை. அக் குற்றங்களையும் ஒருவகையில் குணங்களாக ஏற்றுக்கொண்டு மகிழ்வதுண்டு. திருமகளின் கேள்வனான திருமால், தன்னைப் புகல் அடைந்தவர்களாகிய அடியவர்களின் பக்கலில் குற்றங்களைக் கண்டாலும், அக்குற்றங்களுக்காக அவ்வடியவர்களை இகழ்ந்து கைவிடும் இயல்பினன் அல்லன். ஒரு பசுவானது, தான் அப்போது ஈன்ற கன்றின்மீதுள்ள பாசத்தால், அக்கன்றின் உடல்மீதுள்ள அழுக்கையும் விரும்பி, அதனைத் தன் நாக்கினால் உண்டு போக்கி, அக்கன்றைத் தூய்மைப்படுத்தி மிகவும் மகிழும். அதுபோலவே இறைவனும் தன் அடியவர்களின் குற்றங்களைக் காணாமை மட்டுமின்றி, அவற்றைப் பொறுத்து, அவற்றையே தனக்குப் பெரிதும் இனிய போக்கியப் பொருளாகவும் கொண்டு மகிழ்வான்.

அற்றம் உரைக்கில், அடைந்தார்பால் அம்புயைகோன்
குற்றம் உணர்ந்திகழும் கொள்கையனோ?—எற்றேதன்
கன்றின் உடம்பின் வழுவன்றோ, காதலிப்பது
அன்றதனை ஈன்றுகந்த ஆன்.

—ஞானசாரம்

[அற்றம்-சாத்திரங்களின் முடிந்த முடிவான பொருள். அற்றம்-முடிவு. அம்புயம்-தாமரை. அம்புயைகோன்-திருமகளின் கேள்வன். இகழும் கொள்கையனோ-இகழ்ந்து கைவிடும் தன்மையன் ஆவானோ? ஆன்-பசு. வழு-அழுக்கு.]

—ஆசிரியர்.

# தேசிக நாயகி

மகாவித்துவான்
திரு கி. வேங்கடசாமி ரெட்டியார், வளவனூர்

தூப்புற் பெருமானார் தூமென் மலர்ப்பதமே
காப்பிங் கெமக்கென்றுங் காண்

எம்பெருமானுக்கும் நமக்கும் உள்ள சம்பந்தத்தைத் தெரிவிப்பது ஞானம். எம்பெருமானுக்கும் நமக்கும் உள்ள சம்பந்தம் தெரிந்த பின், அவனை இடையறாது நினையச் செய்வது பக்தி. இப் பக்தி மிகுந்தபோது எம்பெருமானைத் தலைமகனாகவும் தன்னைத் தலைமகளாகவும் கொண்டு, அப் பாவனையின் முதிர்ச்சியால் நாயகியாகவே ஆகிவிடுதல் உண்டு. 'பக்தி சிருங்கார விருத்தியா பரிணமிதி' என்று இதனை முன்னோர் மொழிவர். 'பிரேமத்தில் பெண் பேச்சு' என்பதும் இதுவே. இம்முறையில், தம்மை நாயகியாகவே ஆக்கிக் கொண்டு நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் முதலிய பெரியோர்கள் பாசுரங்கள் அருளியுள்ளனர்.

இதனால், அப் பெரியோர்களைப் 'பராங்குசநாயகி' 'பரகாலநாயகி' என அன்புடன் சொல்வதுண்டு. நாயகி நாயக முறையில், தலைவன் கூற்று, பாங்கன் கூற்று, தலைவி கூற்று, தோழி, தாயார் கூற்றுகள் என வைத்துப் பாடுகின்ற முறை, தமிழ் நூல்களிலே மிக உண்டு. நம்மாழ்வார் அருளிய முதல் பிரபந்தம் திருவிருத்தம். இதில் ஆழ்வார் இரண்டாவது பாசுரத்திலேயே நாயகியாகவே ஆகின்றார். பின்னர் இப்பிரபந்தம் முழுவதிலும் இங்ஙனமே நிலைத்து விடுகின்றார். இரண்டாவது பாசுரத்தில் நாயகியான தம் நிலையைத் தாமே சொல்லாது தோழி கூற்றில் வைத்துச் சொல்கின்றார். அப்பாசுரம் இது:-

''செழுநீர்த் தடத்துக் கயல்மிளிர்ந்
தாலொப்பச் சேயரிக்கண்
அழுநீர் துளும்ப அலமரு
கின்றன வாழியரோ
முழுநீர் முகில்வண்ணன் கண்ணன்
விண்ணாட்டவர் மூதுவராம்
தொழுநீர் இணையடிக்கே யன்பு
சூட்டிய சூழ்குழற்கே''

இதனுள் எம்பெருமானுடைய திருவடிகளுக்கு அன்பு சூட்டிய இத் தலைமகளின் சேயரிக்கண், நீர் மிகுந்த கயத்தில் கயல் மிளிர்தல் போன்று அழுநீர் துளும்ப அலமருகின்றன; இந்நிலை எம்பெருமானை விரும்பியதால் வந்தது; ஆகவே இந்நிலைக்கு வாழ்த்துக் கூறுகின்றாள் தோழி என்று விளக்குகின்றார் நம்மாழ்வார்.

உலகியலில் காணப்படும் காதலுக்கும் இப் பாவனை முதிர்ச்சியால் வந்த தெய்விகக் காதலுக்கும் ஒரு வேறுபாடு உண்டு; அதாவது உலகியலில் தலைவி தலைவனுடைய சுந்தரத் தோளை விரும்புவதும், இந்தத் தெய்விகக் காதலில் தலைவி தலைவனுடைய திருவடிகளையே விரும்புவதுமாம். இவ் வேற்றுமையின் நுட்பம் உணர்தல் வேண்டும். 'தொழுநீர் இணையடிக்கே அன்பு சூட்டிய சூழ்குழல்' என நம்மாழ்வாரும்; 'விழிவார் அருள்மெய்யர் மெல்லடி வேண்டிய மெல்லியல்' எனச் சுவாமி தேசிகனும் அருளியது கொண்டு இதனை அறியலாம். சுவாமி தேசிகன் தவிர ஆழ்வார்களுக்குப் பின்வந்த ஆசாரியர்களுள் ஒருவரும் நாயகி நிலையில் பேசினதாகத் தெரியவில்லை. இவர் ஒருவர்தான் நாயகி பாவனையில் பேசியுள்ளார். நம்மாழ்வாரிடத்தில் சுவாமி தேசிகனுக்கு மிகவும் ஈடுபாடுண்டு. இதனை, ''தந்தை என நின்ற தனித் திருமால் தாளில், தலை வைத்தோம் சடகோபன் அருளினாலே'' என்பதனால் அறியலாம். மேலும் இவர்தம் பெருமையையும், அடக்கத்தினையும்,

''வேண்பெரிய விரிதிரைநீர் வையத் துள்ளே
வேதாந்த ஆரியனென் றியம்ப நின்றோம்
நாண்பெரியோம் அல்லோம்நாம் நன்றும்தீதும்
நமக்குரைப்பார் உளரென்று நாடு வோமே''

என்பதால் அறியலாம்.

சடகோபனருளால் திருமால் தாளில் தலைவைத்தும், வேதாந்த ஆரியனென்றியம்ப நின்றும், நன்றும் தீதும் நமக்குரைப்பார் உளர் என்று திருவுள்ளம் பற்றியும் நின்ற சுவாமி தேசிகன், தாமும் நாயகி பாவனையின் முதிர்ச்சியில் நின்று, நம்மாழ்வார் அருளிய அதே திருவிருத்தத்தில், இரண்டாவது பாசுரத்திலே அவர் அடைந்த நிலையைத் தாம் மூன்றாந் திருவிருத்தத்தில் அடைந்ததாக அருள்வதை நோக்குதல் வேண்டும்.

இதனால் இவர்க்கு ஆழ்வாரிடத்துள்ள ஈடுபாடு மேலும் நிறம் பெறுகிறது. முப்பது பாசுரங்களாலான திருப்பாவை பாடிய செல்வி மீது 'கோதாஸ்துதி' என்று 29 சுலோகங்களாலான நூல் அருளிக் கோதையின்மீது தம் ஈடுபாட்டைத் தெரிவித்துக்கொண்டது போன்று, இரண்டாந் திருவிருத்தத்தில் ஆழ்வார்

அடைந்த நாயகி நிலையைத் தாம் மூன்றாந் திருவிருத்தத்தில் அடைந்ததாக அருளியதனால் ஆழ்வாரிடத்துத் தம் ஈடுபாட்டை மெய்ப்பித்து விடுகின்றார். தாம் நாயகி நிலையை மூன்றாந் திருவிருத்தத்தில் அடைந்ததாக அருள்கின்றார் எனின் எதில் என்று தெரிந்து கொள்ள வேண்டுமே! 'மும்மணிக்கோவை' என்ற நூலில் என்று தெரிந்து கொள்ளவேண்டும். இம் மும்மணிக்கோவை சுவாமி அருளிய முதல் தமிழ்நூல் என்று நாமும் பூரிப்படைகின்றோம்.

ஆசிரியப்பா, வெண்பா, கலித்துறை என்ற வரிசையில் முறையே பாடப்படுவது மும்மணிக்கோவையாகும். ஒவ்வொன்றும் ஒரு மணி போன்றவை; ஆகலின் மூன்று மணிகள்போன்ற மூவகைப் பாடல்களால் முறையே பாடப்படும் நூலுக்கு மும்மணிக்கோவை என வழங்குவது ஒரு மரபு. தாம் அருள்பெற்றது திருவயிந்திர புரத்தில். ஆங்கு எழுந்தருளிய எம்பெருமான் திருநாமம் தெய்வ நாயகன் என்பது. இவர் தெய்வநாயகனிடத்தில் மிகவும் ஈடுபட்டவர் என்பது இவருடைய பாசுரங்கள் கொண்டறியலாம். தாம் எந்தத் தெய்வ நாயகனிடத்தில் ஈடுபட்டாரோ அந்தத் தெய்வநாயகனுக்கேற்ற தெய்வநாயகியாக இவர் விளங்கியதில் வியப்பில்லை. நம்மாழ்வார் தாம் அருளிய முதல் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் இரண்டாவது பாட்டிலேயே நாயகி பாவனையை அடைந்து அந்த நிலையைத் தோழி கூற்றாக அருளியிருக்கின்றார் என்பதை முன்னரே அறிந்தோம். அதே நிலையைத் தாம் மூன்றாவது திருவிருத்தத்தில் அடைந்ததாகக் கூறுதற்கேற்றவாறு இம்'மும்மணிக்கோவை' எனும் பிரபந்தத்தைச் சுவாமி தேர்ந்தெடுத்திருக்கின்றார் என்று தோன்றுகிறது. இம் மும்மணிக்கோவையில் 3, 6, 9 எண் உள்ள மூன்று பாடல்களே சுவாமி தெய்வநாயகியாக இருந்து பாடியவை. இனி இவற்றின் விளக்கங்களை முறையே ஒவ்வொன்றாக நோக்குவோம்.

**முதற்பாசுரம்:**

முதலில் திருவயிந்திரபுரத்தின் பெருமை விளக்கப்படுகிறது. திருவயிந்திரபுரத்தைத் திருவயிந்தை என்பது மரபு. ஒருவராற் செய்யப் பெறாததும் வேதம் எனப் பெயர் பெற்றதுமான மறை மூன்று வகைப்படும். திரயீ என்பது வடமொழியில் வழங்கும் பெயர். அவற்றைச் சொல்லுதற்குரியார் சிலர்; உரியரல்லாதார் பலர். சொல்லுதற்குரியாரோடு வாசியறப், பெண்களோடு வாசியறப், பேதையரோடு பெரியோரோடு வாசியறப், பெண்களோடு ஆண்களோடு வாசியற அத் திவ்விய தேசத்தில் வாசம் செய்பவர்கள் பேசுவதெல்லாம் மும்மறையே; மும்மறையின் கருத்தேயாகும்; அப்படிப்பட்ட பாக்கியம் பெற்றவர்கள் நித்திய வாசம் செய்வது திருவயிந்தை.

மேன்மை (பரத்துவம்) மட்டும் விளங்குமிடத்திருந்து எளிமைக் (சௌலப்பிய) குணமும் சேர்ந்து இருட்டறையில் விளக்குப் போல ஒளி விடுவதற்காக இங்கே எழுந்தருளியிருக்கின்றான் தெய்வநாயகன். எப்படி? இன் அமுதக் கடலாக; எதற்கு? இத் திவ்விய தேசத்திலுள்ளாரேயன்றி மற்றையோரும் இவ் இன்ப அமுதக் கடலில் இழியட்டும், இழிந்து தன்னை அனுபவித்து இன்புறட்டும் என்பதற்காக. அதனால் முற்குணத்து முதல்வனின் நற்குணக் கடலாடுதற்கு விரும்பி இழிவார் இழிக என்று பலரும் அறியச் சொல்லி, இன் அமுதக் கடலாகி நின்றான். இங்கு 'நீராடப் போதுவீர் போதுமினோ' என்பது நினைவு கூர்தற்குரியது. 'அலையற்ற ஆரமுதக் கடல்' என்பதும் நினைக்கத் தகும். உவரிக் கடலை நீக்குதற்கு இன்னமுதக் கடல் எனப்பட்டது. பரத்துவம் மட்டும் உறைக்கும்போது அமுதக் கடல்; எளிமைக் குணமும் சேரும்போது 'இன் அமுதக் கடல்' ஆக விளங்குகிறது. அடுத்து இக் கடலின் உருவம் பேசப்படுகிறது. 'ஆவார் ஆர் துணை' என வருந்துகின்றவர்களைக் காப்பாற்றுதற்கென்று விளங்குவது அருள் என்னும் அரிய குணம். 'அருள் எனும் சீர் ஓர் அரிவையானது' எனப் பிராட்டியைச் சொல்வது போலத் தெய்வநாயகனும் அருள்மெய்யர்; அருளே திருமேனியாக உடையவர். அருள் ததும்புவதை எங்குக் காணலாம்? விழியில்தான் காண முடியும். அருளுக்கு எல்லையுண்டா? இல்லை; விழியில் இருந்து வார்கின்றது; வார்ந்து கொண்டேயிருக்கின்றது, அதனால் விழிவார் அருள்மெய்யர் என்று பேசப்படுகின்றார்.

அவ் அருளுக்கு இலக்காக விளங்குபவர்கள் மெல்லியலார்கள்தாம்; வல்லியலார்கள் அல்ல. வன்மைக் குணம் உடைய ஒருவரும் அருளுக்கு இலக்காக முடியாது. அமுதக் கடலாகவும் அருள் வடிவாகவும் விளங்குகின்ற தெய்வ நாயகனும் மெல்லடியுடையவனாக விளங்குகின்றார். ஆழியான் என்னும் ஆழ மோழையின் அடியிலே விழுகின்றவரும் மெல்லியலார். இவரும் மெல்லியல் ஆனார்; அவரும் மெல்லடி யுடையர். பிராட்டியின் திருவடியைச் சொல்லும்போது பஞ்சு எனப் பெயர் சொன்னாலும் சிவக்கும் திருவடி என்பர். 'பஞ்சு எனச் சிவக்கும் மென்கால் தேவி' என்பர் கம்பநாடரும். 'வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி' என்பது திருவாய்மொழி. இம் மெல்லடி கொண்டோ உலகம் அளந்தது? சகடாசுரனைச் சாய்த்தது? என்று ஐயுற வேண்டுவதில்லை. ''வேண்டுவார் மெல்லியர் ஆகையாலே மெல்லடி வேண்டுவர்; அத்தலைக்கு இரண்டடியுண்டு காணும்; கஞ்சனைக் காய்ந்தது வல்லடி, கன்றின்பின் போனது மெல்லடி; சகடிறச் சாய்ந்தது வல்லடி, வெண்ணெய் களவிடப் பொனது மெல்லடி; உலகம் அளந்தது வல்லடி, தூது நடந்தது மெல்லடி! என்பது வியாக்கியானப் பகுதி.''

அவரோ இன்னமுதக் கடலாகி நின்ற மெய்யர்; விழிவார் அருள்மெய்யர், இழிவார் இழிக என்றார். இவரோ மெல்லியர் 'நெடுங் காலமும் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப் பெற்ற தொடுங்கால் ஒசியும் இடை இளமான்' ஆதலின் மெல்லடி வேண்டினார். இவர்மீது மேலும்மேலும் அநங்கர் பூங்கரும்பிலிருந்து உந்தி (தள்ளி)ப் பூமழையே பொழிவாராயி

னார். இன்னமுதக் கடலாகிநின்ற அவரோ அருள்மெய்யர்; பூமழை பொழியும் இவரோ அருளோடு மெய்யும் இல்லாதவர் என்பது தோன்ற, அநங்கர் (மெய்யில்லார்)என்ற சொல் இங்கு அமைந்துளது. அவர்தம் ஐங்கணை இங்கு அளவில்லா மலர்க்கணைகளாகின்றன. இதனால் மெய்யர் மெல்லடி வேண்டிய மெல் லியல்மேல் வேட்கை மிகுதற்குரிய பூமழைகளை மெய்யிலராகிய அநங்கர் பொழிகின்றார் என் பது வருமாறு. இக்கருத்துக்கள் அமைந்தது கீழ் உள்ள முதல்பாடல்.

''மொழிவார் மொழிவன முமமறையாகும்
அயிந்தை யில்வந்
திழிவார் இழிகஎன் றின்னமுதக்
கடலாகி நின்று
இழிவார் அருள்மெய்யர் மெல்லடி
வேண்டிய மெல்லியல் மேல்
பொழிவார் அநங்கர்; தம் பூங்கரும்பு
உந்திய பூமழையே!''

இதனுள் அநங்கர் என்ற உயர்வு குறிக்குஞ் சொல் - சாட்சாத் மன்மதமன்மத என்று சொல்லப்பெற்ற தெய்வநாயகனே, தன்மீது இம்மெல்லியலுக்கு மேலும் மேலும் அன்புண் டாகுமாறு செய்து கொள்கின்றான் என உள் ளுறைப் பொருள் கொள்வர். 'வாசித்தொழும் மன்மதனார்' என நவமணி மாலையில் வரு வதும் காணலாம். எம்பெருமானைக் 'கனியு திர்த்த காளை' எனப் போலியாகச் சொல்வது போன்று 'அநங்கர்' என்று கூறுவதிலும் இழுக் கில்லை. இனி அடுத்த பாடலுக்கு வருவோம்.

—தொடரும்

---

## "உலகில் எதுவும் தற்செயலாக நிகழ்வதில்லை"

''இவ்வுலகத்தில் எதுவுமே தற்செயலாக நிகழ்வதில்லை, அனைத்துமே காரண காரி யங்களின்படியே நடைபெறுகின்றன. கடவுள் என்பவர், ஓர் ஒழுங்கு முறையினைக் கடைப் பிடிக்கும் கடவுளாகவே இருக்கின்றார். ஒவ்வொரு பொருளும், வரையறுக்கப்பட்ட தெளி வான கொள்கைகளின் அடிப்படையிலேயே வகுக்கப்பட்டுள்ளது. உலகப் பொருள்களுள் எதுவும் ஒருவகைத் தொடர்பின்றி, ஒழுங்கற்ற நிலையில், அங்கொன்று இங்கொன்றாய்த் தாறுமாறாக ஒருபோதும் நிகழ்வதில்லை. இவ்வுலகம் மட்டும் அன்றி, ஆன்மிக உலகமும் கூட, நிலையான ஒருவகை இயற்கை நியதிச் சட்டத்தின்படியே இயங்குகின்றது. ஒழுக்க நெறி, சட்டத்தினாலேயே இயக்கப்படுகின்றது. மகிழ்ச்சி, சட்டத்தினாலேயே இயக்கப்படு கின்றது. இறையியல் அனுபவங்கள், சட்டத்தினாலேயே இயக்கப்படுகின்றன. இதனை மறந்துவிட்டு மனிதர்கள், ஓய்வு மகிழ்ச்சி அமைதி நம்பிக்கை முதலியவைகள், பனியும் மழையும்போல, எங்கோ வானத்திலிருந்து, தம் உயிருக்குள் வந்து விழுதல் வேண்டும் என்று எதிர்பார்க்கின்றனர். ஆனால் உண்மையில் அவைகள் அங்ஙனம் நிகழ்வதில்லை. ஓய்வு மகிழ்ச்சி அமைதி நம்பிக்கை முதலியன, தம்முடைய தொடக்கத்தினைத் தம்முடைய முன்னைய செயல்களிலிருந்தே பெறுகின்றன; இயற்கைச் சட்ட விதிகளின்படியே அவைகள் அடக்கி ஆளப்பெறுகின்றன. மழையும் பனியும் வானத்திலிருந்தே விழுகின்றனவாயினும், அவற்றிற்கொரு நீண்ட முன்னைய வரலாறு இல்லாமல், அவைகள் திடுமெனத் தொடர்பின் றித் தோன்றி, ஒழுங்கற்று விழுவதில்லை. மழையும் பனியும், தத்தம் முன்னைய காரணங் களின் முதிர்ந்த விளைவுகளே யாகும். ஓய்வு அமைதி மகிழ்ச்சி என்பனவும், அத்தகைய நிலையினவே. அவைகளும்கூட, தனித்தனியே ஒரு முன்னைய வரலாற்றைப் பெற்றுள்ளன. புயல்களும், சூறாவளிகளும், அமைதி நிலைகளும் தற்செயலாகத் தோன்றி நிகழ்வன அல்ல. அவைகள் அனைத்தும் முன்னைய சூழ்நிலைகளால் காரண காரிய முறைப்படி, கொணரப் பெறுவனவே. ஓய்வும் அமைதியும் பிறவும், மனிதனின் அகஇயல் இயற்கையின் விளைவுகளே யாகும்; அவைகள் உறுதியானவையும், தவிர்க்க இயலாதவையும் ஆகிய காரணங்களின் மூல மாகவே தோன்றுகின்றன. இதனை முழுவதாகவும், தெளிவாகவும் உணர்ந்து கொள்ளுங்கள்: இவ்வுலகமானது காரண காரியங்களின் அடிப்படையில், ஒழுங்கு முறைப்படி அமைந்த உலகமே தவிர, ஒரு தற்செயல் உலகமன்று'' - ''அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது''.

தமிழாக்கம் : **ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.**

### NOTHING HAPPENS BY CHANCE

"Nothing that happens in the world happens by chance. God is a God of order. Everything is arranged upon definite principles, and never at random. The world, even the religious world, is governed by law. Character is governed by law. Happiness is governed by law. The Christian expreiences are governed by law. Men, forgetting this, expect Rest, Joy, Peace, Faith, to drop into their soulds from the air like snow or rain. But in point of fact they do not do so; and if they did they would no less have their origin in previous activities and be controlled by natural laws. Rain and snow do drop from the air, but not without a long previous history. They are the mature effects of former casus. Equally so are Rest, and Peace, and Joy. They too, have each a previous history. Storms and winds and calms are not accidents, but are brought about by antecedent circumstances. Rest and Peace are but calms in man's inward nature and arise through causes as defnite and as inevitable. Realise it throughly: it is a methodical not an accidental world".

PROF. **Henry Drummond,**
*The Greatest Thing in the World.*

# ஆதிசங்கரரும் சிவபெருமானும்

*''வேதாந்த வித்தகர்''*

திரு டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், M.A.,Ph.D., சென்னை.

ஆதிசங்கரர் இயற்றிய சிவானந்தலகரி என்னும் அழகிய பாமாலையில், சிவபரத்துவம் என்ற நறுமணம் கமழ்கின்றது. பல காரணங்களைக் கொண்டு சிவபரத்துவம் இந்நூலில் நிலைநாட்டப்படுகின்றது. அவரவர் தாம் வழிபடும் கடவுளை, யாவர்க்கும் யாவற்றிற்கும் மேலான பொருளாக மதிப்பது, இந்துக்களின் மரபு. கடவுள் ஒன்றே; அவரது நாமங்கள் பல. ஆதிசங்கரர் அவதரித்த குலத்தின் தெய்வம் சிவம்; அவரே பரசிவத்தின் அவதாரம் என்றும் கருதப்படுகின்றார். சிவ மகிமையை எடுத்துக்காட்டும் சிவானந்தலகரியின் சில சுலோகங்களின் கருத்தை மட்டும் இங்கு விளக்குவோம்.

உலகில் அநேக தேவதைகள் உளர். வழிபடுவோர் விரும்பும் பலன்களை அளிக்கின்றனர். ஆனால் அவர்கள் வழிபடுவோரின் அஞ்ஞானத்தைப் போக்கும் சக்தியற்றவர். இந்தத் தேவதைகளைத் தாம் பின்பற்றுவதில்லை என்று, சங்கரர் ஒரு சுலோகத்தில் கூறுகின்றார். ''ஆயிரக்கணக்கான தேவதைகள் இருக்கின்றனர் இவ்வுலகில். தாமே அறிவிலிகள், அல்ப பயன்களை அளிப்பவர், கனவில்கூட அவர்களைப் பின்பற்றவோ, அவர்கள் அளிக்கக்கூடிய வரத்தையோ நான் விரும்பவில்லை. சிவமே! விஷ்ணு பிரம்மா முதலியவர்களாலும்கூட சுலபமாக அடையமுடியாததாகிய உம்முடைய செந்தாமரையொத்த பாதங்களைப் போற்றுவதையே, வெகுகாலமாக நான் யாசிக்கிறேன்''.

மற்றொரு சுலோகத்தில், மற்ற தேவதைகளை வழிபடுவது மயக்கத்தினால் என்று சொல்லுகிறார் சங்கரர். ''எவ்வாறு முத்துச் சிப்பியில் வெள்ளியென்றும், கண்ணாடியில் மணி என்றும், கானல் நீரில் தண்ணீர் என்றும் மயக்கம் ஏற்படுகின்றதோ, அதேபோல் பரம் பொருளாகிய தாங்கள் அல்லாதவற்றைத் தேவதை என்ற பிரமையினால் மூட ஜனங்கள் பூசிக்கின்றனர். மகாதேவனும் ஈசனுமாகிய உம்மை அவர்கள் மனதில் நினைப்பதில்லை." (2)

அல்ப பலன்கள் மற்றவர்களிடமிருந்து கிடைக்கும். ஆனால் மோட்சம் என்ற மேலான பொருள் பரமசிவத்திடம்தான் பெறக்கூடும். ''நீர் ஒருவர்தான் எல்லோருக்கும் மேலான வரத்தைக் கொடுப்பவர். திவ்வியமான பதவிகளைத் தங்கள் மூலமாக வகிக்கும் விஷ்ணு முதலியவர்கள் தங்களை மறுபடியும் பூசிக்கின்றனர். என்னே உமது கருணை! எத்தகைய்து எனது அவா! அருள் நிறைந்த பார்வையோடு என்னை எப்பொழுது காப்பாற்றுவீர்?'' (3)

விஷ்ணுவும், பிரம்மாவும் பரசிவத்தின் அடிமுடி காணாமற் போயினர் என்ற புராணக் கதையைப் பலமுறை உபயோகப்படுத்துகிறார் சங்கரர். இந்தப் பதவிகளே பரமேசுவரனின் அருளால் கிடைக்கின்றன. கிடைத்தும் அவற்றால் மாத்திரம் ஈசுவர தத்துவத்தை அறிய முடியாது. ''எங்கும் வியாபித்துள்ள பொருளே! உம்முடைய பூசையை நான் செய்கிறேன். என் பூசையின் பலனாகப் பிரம்மாவின் பதவியையோ விஷ்ணுவின் தன்மையையோ அளிக்கின்றீர். ஆனால் மறுபடியும் உம்மைப்பார்க்க வேண்டி அவர்களைப்போல், பறவையாகவோ, விலங்காகவோ மாறுதல் அடைந்து ஆகாயத்திலும் பூமியிலும் தேடி, உம்மைப் பார்க்க முடியாமல் சோர்வு ஏற்பட்டால், அதை நான் எவ்வாறு சகிப்பேன்? ஏ சங்கரா!'' (4)

''ஏ கைலாசபதியே! உம்மைப் பார்த்து, உம்முடைய மேன்மையான பாதங்களைக் கைகளில் தாங்கித் தலையிலும், கண்களிலும், மார்பிலும் ஒத்திக்கொண்டும், ஆலிங்கனம் செய்து நேர்த்தியான அந்தக் கமலங்களிலிருந்து உண்டாகும் பரிமளமான வாசனைகளை முகர்ந்தும், பிரம்மா முதலியவர்களுக்கும் கிடைக்கக்கூடாத இன்பத்தை இருதயத்திலே எப்பொழுதும் நான் அநுபவிப்பேன்.'' (5)

''உம்மை நான் எவ்வாறு பூசை செய்வேன். வஸ்திராலங்காரம் செய்வதற்குச் சூரியனுக்குரிய ஆயிரம் கைகள் இருந்தால், மலர்களை அருச்சிப்பதற்கு விஷ்ணுவின் சக்தி இருந்தால், சுவாசனையை அர்ப்பணம் செய்ய வாயுவின் தன்மை இருந்தால், நைவேத்தியத்தைச் சமைப்பதற்கு அக்கினியின் சாமர்த்தியம் இருந்தால், தகுதியும், இரண்யகர்ப்பனைப்போல் ஏற்படுமானால், உம்மைப் பூசிப்பதற்கு நான் முயற்சிக்கலாம். ஏ! சந்திரசேகரா! பசுபதி! சுவாமி! மூவுலகங்களுக்கும் குருவே!'' (6)

சிவபரத்துவத்தை நிரூபிப்பதற்கு நஞ்சை உண்ட கண்டனாக விளங்குவதே போதும்

என்று சங்கரர் கூறுகின்றார். ''இந்த ஒரு பர மோபகாரம் போதாதா? உம்முடைய வயிற்றி லுள்ளனவற்றையும், வெளியிலுள்ள பொருள் களையும், காப்பாற்றுவதற்காக, தேவர்களை யும் ஓடும்படியாகச் செய்த தீப்பற்றி எரிந்து கொண்டிருந்த பயங்கரமான நஞ்சை உள்ளே விழுங்காமலும், வெளியே உமிழாமலும், கழுத் தில் வைத்துக்கொண்டீர்!'' (7)

''சம்மாரமூர்த்தி பரசிவம், பிரளயகாலத் தில் எல்லாம் நாசமடைந்து மறைந்த பின் எஞ்சி நிற்கும் பொருள் அதுவே. உம்முடைய சாகசத்தை என்னவென்று சொல்வது. உமது தைரியம் யாருக்கு வரும்? இப்பேர்ப்பட்ட உம் முடைய நிலையை மற்றவர் எவ்வாறு அடை வர்? தேவகணங்கள் தங்களுடைய உயரிய நிலைமையினின்றும் விழுகின்றனர். முனிவர் கள் நடுங்குகின்றனர். பிரபஞ்சம் முழுவதும் நசித்து லயமடைகின்றது. இதைப் பார்த்துக் கொண்டு, கொஞ்சமும் பயமில்லாமல், ஒருவ ராய், ஆனந்தத்தில் மூழ்கினவராய் நீர் விளை யாடுகின்றீர்''. (8)

சிவதாண்டமும் சிவபரத்துவத்தைக் காட் டுகின்றது. ''ஆதிபொருள் நீர், அளவுகடந்த செஞ்சுடர்; உம்மைச் சுருதி வாக்கியங்களால் அறியவேண்டும், அடையவேண்டும். ஞானமும் ஆனந்தமும் உம்முடைய சுவரூபம். மூவுலகங் களையும் காப்பதில் நீர்விழைவு கொண்டுள் ளீர். எல்லா யோகிகளும் உம்மைத் தியானம் செய்கின்றனர். தேவர்களெல்லாம் உம் புக ழைப் பாடுகின்றனர். மாயைக்கு அதிபர் நீர். சடாதாரியாய் அழகிய தாண்டவம் புரிகின்றீர். சம்புவாகிய உமக்கு என் வணக்கம்.'' (9)

''விஷ்ணு உயர்ந்த பூசைக்கு உரியவராக ஏன் விளங்குகின்றார் என்றால், உம்மோடு அவர் நெருங்கி இருப்பதினால்தான். உம் கை யில் அம்பாகவும், நீர் ஏறும் விருஷபமாகவும் உம்முடைய சரீரத்தின் பாதியாகவும், உமக்கு மனைவியாகவும் உம்முடைய பாதங்களைக் காணப் பன்றியாகவும், உம்மோடு தோழமை கொண்டும், நீர் தாண்டவ மாடும்போது மிரு தங்க வாத்தியத்தை முழங்கிக்கொண்டும் விளங்குகின்றார். உம்முடைய பாதங்களில் தம் முடைய கண்ணையே மலராகவும் அர்ப்பணம் செய்தார். உம்முடைய தேகத்தின் ஒரு பாகத் தையும் பெற்றார். ஆகையினால்தான் மற்ற தேவர்களுக்கெல்லாம் உயர்ந்து நிற்கின்றார் மகாவிஷ்ணு.'' (10)

''அமரர்கள் எனப்படும் தேவர்களும் பிறந்து இறப்பவர்களே. அவர்களைச் சேவிப்ப தால் கொஞ்சம்கூட சுகம் கிடையாது. இதில் சிறிதும் சந்தேகமில்லை. எவர் பிறப்பிறப்பு அற்ற பரசிவத்தைப் பூசிக்கின்றனரோ அவரே இங்கு பேரின்பத்தைப் பெறுவர், கடைத்தேறு வர்.'' (11)

''பூசைக்கு வேண்டியனவற்றை நான் சேகரித்துவிட்டேன். ஆனால் எவ்வாறு நான் பூசிப்பது. பறவையாகவோ, விலங்காகவோ நான் ஆக முடியாது. அந்த நிலைமை கிடைப் பது அரிது. உம்முடைய முடியையும் அடியை யும் நான் காணமுடியாது. பிரம்மாவும் விஷ்ணு வும் பறவை-விலங்கு ரூபங்களை எடுத்தும்கூட உம்மைக்காண இயலவில்லையே.'' (12)

சிவானந்த லகரியின் கடைசி சுலோகத்தில் சிவமகிமையைப் பற்றிப் பின்வருமாறு சங்கரர் கூறுகின்றார். ''உம்மைப் புகழ்வதற்காக நான் பொய் சொல்லவில்லை. பிரம்மா முதலிய தேவர்களெல்லாம் உம்மையே, துதிக்கப்பட வேண்டியவர்களுள் முதல்வராகக் கருதுகின்ற னர். யார் உயர்ந்தவர், பரம மகத்துவம் பெற் றவர் என்று தான்யத்தை உமியினின்று பிரிப் பதுபோல் விசாரித்து உம்மையே யாவற்றிற்கும் மேலான பயனைக் கொடுக்கக்கூடியவராக அறி கின்றார்கள், உம்முடைய சேவகர்கள்''. (13)

**

# இன்பியல் மனிதன் !

எவனுடை வாழ்க்கை நேர்மை எய்திநன் றொளிரும்? யாவன்
அவமிகு செயலும் சூதும், அறிவிலாச் செருக்கும் இன்றி,
நவமிகும் உளத்தி னோடு, நல்வழி இன்பம் துய்த்துத்,
தவமிக அமைதியோடு, தன்னுடை நாள்க ழிப்பான்? (1)

நிறை பெருஞ் சீரின், யாவன் நினைந்துதற் காத்துக் கொள்ள,
மறைவழிச் சுருங்கை வேண்டான்; மதிலொடு படைகள் வேண்டான்;
அறைகடல் ஆழத் தச்சம், அகன்றவான் முழக்கம் எல்லாம்
இறையள வஞ்சான், தன்கண் இனிதுறக் காண வல்லான்? (2)

எத்தகை விழைவ வாவும், ஏய்த்திடல் கூடா மற்றவ்
வித்தகன் தன்னைத் ; துன்பும் மெலிவித்தல் ஒண்ணு; ஊழின்
பற்பல கவலை நன்மை பற்றிடா யாவும்; நல்ல
இத்தகு மனிதன் தானே, **இன்பியல் மனிதன்** என்க! (3)

துறக்கமே அவன்தன் நூலாம்; தூயவான் பொருள்கள் ஞானம்;
சிறக்குநற் பேர்எண் ணங்கள் செறிவுடை அவன்றன் தோழர்;
குறிக்கொளக் கழித்த வாழ்நாள், குறைவறு செல்வ மாகும்;
நெறிக்கொள்இவ் வுலகோர் வீடும்; நீள்வழிச் செலவும் ஆகும்! (4)

—தமிழாக்கம் : **ந. ரா. முருகவேள்**

**(The Character of a Happy Man, by Thomas Campain)**

(8ஆம் பக்கத் தொடர்ச்சி)

| வ.எண் | தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|---|
| 55. | திருக்கச்சிஅநேகதங்காபதம் | அநேகதங்காபதேசுவரர் | காமாட்சியம்மை |
| 56. | திருக்கச்சிஏகம்பரம் | ஏகம்பநாதர் | ஏலுவார்குழலி, காமாட்சி |
| 57. | திருக்கச்சிநெறிக் காரைக்காடு | காரைத்திருநாதர் | காமாட்சியம்மை |
| 58. | திருக்கச்சிமேற்றளி | திருமேற்றளிச்செல்வர் | காமாட்சியம்மை |
| 59. | திருக்கச்சூர் | விருந்திட்டஈசுவரர் | மையார் நெடுங்கண்ணி |
| 60. | திருகஞ்சனூர் | கஞ்சனூர் இறைவர் | கற்பகநாயகி |
| 61. | திருக்கடம்பந்துறை | கடம்பவனநாதர் | முற்றிலா முலையம்மை |
| 62. | திருக்கடம்பூர் (கடம்பர் கோயில்) | அமிர்தகடேசுவரர் | சோதிமின்னம்மை |
| 63. | திருக்கடவூர் | அமிர்தகடேசுவரர் | அபிராமியம்மை |
| 64. | திருக்கடவூர்மயானம் | பிரம்மபுரீசுவரர் | மலர்க்குழல்மின்னம்மை |
| 65. | திருக்கடிக்குளம் | கற்பகஈசுவரர் | சுந்தரநாயகி |
| 66. | திருக்கடுவாய்க்கரைப்புத்தூர் (ஆண்டார் கோயில்) | பொன்நகர்இறைவர் | சிவாம்பிகை |
| 67. | திருக்கடைமுடி | கடைமுடிநாதர் | அபிராமியம்மை |
| 68. | திருக்கண்டியூர் | வீரட்டர் | மங்களநாயகி |
| 69. | திருக்கண்ணார்கோயில் | கண்ணாயிரநாதர் | முருகுவளர்கோதை |
| 70. | திருக்கயிலாயம் | கயிலாயநாதர் | மலைமகள் |
| 71. | திருக்கரவீரம்(கரையபுரம்) | கரவீரேசுவரர் | பிரத்தியட்சமின்னம்மை |
| 72. | திருக்கருகாவூர்(திருக்களாவூர்) | முல்லைவனேசுவரர் | கரும்பனையாள் அம்மை |
| 73. | திருக்கருக்குடி(மருதாந்தநல்லூர்) | கருக்குடியப்பர் | அழகொளிமின்னம்மை |
| 74. | திருக்கருப்பறியலூர் | குற்றம்பொறுத்தநாதர் | கோல்வளையம்மை |
| 75. | திருக்கருவிலி | நற்குணநாதர் | அனைத்தழகம்மை |
| 76. | திருக்கருவூர்-ஆனிலை | பசுபதீசுவரர் | அருள்வடிவம்மை |
| 77. | திருக்கலயநல்லூர்(சாக்கோட்டை) | அமிர்தகலயநாதர் | அமிர்தவல்லியம்மை |
| 78. | திருக்கலிக்காமூர் (அன்னப்பன்பேட்டை) | அழகப்பர் | அழகம்மை |
| 79. | திருக்கழிப்பாலை | பால்வண்ணநாதர் | வேதநாயகி |
| 80. | திருக்கழுக்குன்றம் | மலைமருந்து ஈசர் | பெண்ணினல்லாளம்மை |
| 81. | திருக்களர் | களர்முளைநாதர் | அழகம்மை |
| 82. | திருக்கள்ளில் | சிவானந்தநாதர் | ஆனந்தவல்லியம்மை |
| 83. | திருக்கற்குடி(உய்யக்கொண்டான்) | விழுமியார் | மையார்கண்ணியம்மை |
| 84. | திருக்கன்றாப்பூர் | நடுதறியப்பர் | மாதுமையம்மை |
| 85. | திருக்காட்டுப்பள்ளி-கீழை | ஆரணியவிடங்கர் | அகிலாண்டநாயகி |
| 86. | திருக்காட்டுப்பள்ளி-மேலை | தீயாடியப்பர் | வார்கொண்டமுலையம்மை |

| வ.எண் | தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|---|
| 87. | திருக்காவிரிப்பூம்பட்டினம் | பல்லவனீச்சுரர் | சுந்தரநாயகி. |
| 88. | திருக்காளத்தி | காளத்திநாதர் | ஞானப்பூங்கோதை |
| 89. | திருக்காறாயில் | கண்ணாயிரநாதர் | கயிலாயநாயகி |
| 90. | திருக்கானப்பேர் (காளையார்கோயில்) | காளையார் | பொற்கொடியம்மை |
| 91. | திருக்கானாட்டு முள்ளூர் | பதஞ்சலிநாதர் | கானார்குழலி |
| 92. | திருக்கானூர் | செம்மேனிநாதர் | சிவயோகநாயகி |
| 93. | திருக்கீழ்வேளூர் | கேடிலியப்பர் | வனமுலையம்மை |
| 94. | திருக்குடந்தைக்காரோணம் | காசிவிசுவநாதர் (சோமநாதர்) | காசிவிசாலாட்சி (தேனார்மொழி) |
| 95. | திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம் | நாகேசுவரர் | பெரியநாயகி |
| 96. | திருக்குடமூக்கு(கும்பகோணம்) | கும்பேசுவரர் | மங்களநாயகி |
| 97. | திருக்குடவாயில் | கோணேசுவரர் | பெரியநாயகி |
| 98. | திருக்குரக்குக்கா | குந்தளேசுவரர் | குந்தளநாயகி |
| 99. | திருக்குரங்கணில்முட்டம் | வாலீசுரர் | இறையார்வளையம்மை |
| 100. | திருக்குரங்காடுதுறை-வட | குலைவணங்குநாதர் | அழகுசடைமுடியம்மை |
| 101. | திருக்குரங்காடுதுறை-தென் | இடர்த்துணைநாதர் | பவளக்கொடியம்மை |
| 102. | திருக்குருகாவூர் | வெள்ளடையப்பர் | காவியங்கண்ணி |
| 103. | திருக்குறுக்கை | வீரட்டேசுவரர் | ஞானாம்பிகை |
| 104. | திருக்குற்றாலம் | குறும்பலாநதார் | குழல்வாய்மொழியம்மை |
| 105. | திருக்கூடலையாற்றூர் | நெறிகாட்டுநாயகர் | புரிகுழலாம்பிகை |
| 106. | திருக்கேதாரம் | கேதாரநாதர் | கேதாரகௌரியம்மை |
| 107. | திருக்கேதீச்சுரம் | கேதீச்சுரர் | கௌரியம்மை |
| 108. | திருக்கைச்சினம் | கைச்சினநாதர் | வெள்வளையம்மை |
| 109. | திருக்கொடிமாடச்செங்குன்றூர் | மாதியலும் பாதியர் | பாகம்பிரியாளம்மை |
| 110. | திருக்கொடுங்குன்றம்(பிரான்மலை) | கொடுங்குன்றீசுவரர் | குயில்அமிர்தவல்லி |
| 111. | திருக்கொட்டையூர் | கோடீசுவரர் | பந்தாடுநாயகியம்மை |
| 112. | திருக்கொண்டீச்சுரம் | பசுபதீசுவரர் | சாந்தநாயகி. |
| 113. | திருக்கொள்ளம்பூதூர் | வில்வவனேசுவரர் | சுந்தராம்பிகை |
| 114. | திருக்கொள்ளிக்காடு | கொள்ளிக்காடர் | பஞ்சினும்மெல்லடியம்மை |
| 115. | திருக்கோகர்ணம் | மகாபலநாதர் | கோகர்ணநாயகி |
| 116. | திருக்கோடி | அமிர்தகடேசுவரர் | மையார்தடங்கண்ணி |
| 117. | திருக்கோடிகா | கோடிகாவுடையகோ | வடிவம்மை |
| 118. | திருக்கோட்டாறு | ஐராவதேசுவரர் | வண்டமர்பூங்குழலம்மை |

| வ. எண் | தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|---|
| 119. | திருக்கோட்டூர் | கொழுந்தீசுவரர் | தேன்மொழிப்பாவை |
| 120. | திருக்கோணமலை | கோணேசுவரர் | மாதுமையாளம்மை |
| 121. | திருக்கோயில்(சிதம்பரம்) | சபாநாயகர் | சிவகாமியம்மை |
| 122. | திருக்கோலக்கா | திருத்தாளம் தந்தார் | ஓசைகொடுத்தநாயகி |
| 123. | திருக்கோவலூர் | வீரட்டேசுவரர் | சிவானந்தவல்லி |
| 124. | திருக்கோழம்பம் | குயில்றைவர் | சுந்தரநாயகி |
| 125. | திருக்கோளிலி | கோளிலிநாதர் | வண்டமர்பூங்குழலம்மை |
| 126. | திருச்சக்கரப்பள்ளி | ஆலந்துறையப்பர் | அல்லியங்கோதை |
| 127. | திருச்சத்திமுற்றம் | சிவக்கொழுந்தீசர் | பெரியநாயகி |
| 128. | திருச்சாத்தமங்கை | அயவந்தீசுவரர் | மலர்க்கண்ணம்மை |
| 129. | திருச்சாய்க்காடு(சாயாவனம்) | சாய்க்காட்டப்பர் | குயிலினும்நன்மொழியம்மை |
| 130. | திருச் சிக்கல் | வெண்ணெய்ப்பிரான் | வேல்நெடுங்கண்ணியம்மை |
| 131. | திருச்சிராப்பள்ளி | தாயுமானவர் | மட்டுவார்குழலம்மை |
| 132. | திருச்சிவபுரம் | சிவபுரநாதர் | அழகுக்கொடியம்மை |
| 133. | திருச்சிறுகுடி | மங்களேசுவரர் | மங்களநாயகி |
| 134. | திருச்சிற்றேமம்(சிற்றாம்பூர்) | பொன்வைத்தநாதர் | அகிலாண்டநாயகி |
| 135. | திருச் சீகாழி | பிரமபுரீசுவரர் | திருநிலைநாயகி |
| 136. | திருச்சுழியல் | திருமேனிநாதர் | துணைமாலையம்மை |
| 137. | திருச்செங்காட்டங்குடி | கணபதீச்சுரர் | திருக்குழல்மநாயகி |
| 138. | திருச்செம்பொன்பள்ளி | செம்பொன்பள்ளியார் | மருவார்குழலி |
| 139. | திருச்சேய்ஞலூர் | சேய்ஞலூர் மேயார் | தோழியம்மை |
| 140. | திருச்சேறை(உடையார்கோயில்) | செந்நெறியப்பர் | ஞானவல்லி |
| 141. | திருச்சோபுரம் | சோபுரநாதர் | சோபுரநாயகி |
| 142. | திருச்சோற்றுத்துறை | சொன்னவாறறிவார் | ஒப்பிலாஅம்மை |
| 143. | திருத்தண்டலைநீணெறி | நீள்நெறிநாதர் | ஞானாம்பிகை |
| 144. | தருமபுரம் | யாழ்மூரிநாதர் | தேனமிர்தவல்லி |
| 145. | திருத்தலைச்சங்காடு | சங்குஅருள்நாதர் | சுந்தரநாயகி |
| 146. | திருத்தலையாலங்காடு | ஆடவல்லார் | திருமடந்தையம்மை |
| 147. | திருந்துதேவன்குடி | தேவன்குடிச் செல்வர் | அருமருந்தம்மை |
| 148. | திருத்திலதைப்பதி | மதிமுத்தேசர் | பொற்கொடியம்மை |
| 149. | திருத்தினைநகர் (தீர்த்தனகிரி) | சிவக்கொழுந்தீசுவரர் | ஒப்பிலாநாயகி |
| 150. | திருத்துருத்தி(குத்தாலம்) | துருத்தியப்பர் | முகிழாம்பிகை |
| 151. | திருத்துறையூர் | பசுபதீசுவரர் | பூங்கோதைநாயகி |

| வ.எண். | தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|---|
| 152. | திருத்தெங்கூர் | வெள்ளிமலைநாதர் | பெரியநாயகி |
| 153. | திருத்தெளிச்சேரி(கோயிற்பத்து) | பார்வதீசுவரர் | சத்தியம்மை |
| 154. | திருத்தென்குடித்திட்டை | பசுபதீசுவரர் | உலகநாயகி |
| 155. | திருத் தேவூர் | தேவபுரீசுவரர் | பண்ணிலாவிய மொழியுமை |
| 156. | திருநணா (பவானி) | சண்முகநாதர் | வேதாம்பிகை |
| 157. | திருநல்லம் (கோனேரி ராசபுரம்) | உமாமகேசுவரர் | மங்களநாயகி |
| 158. | திருநல்லூர் | கலியாணசுந்தரேசுவரர் | கலியாணசுந்தரி |
| 159. | திருநல்லூர்ப்பெருமணம் (ஆச்சாபுரம்) | சிவலோகத்தியாகர் | திருவெண்ணீற்றுமை |
| 160. | திருநள்ளாறு | நள்ளாறப்பர் | போகமார்த்தபூண்முலையம்மை |
| 161. | திருநறையூர் | சித்தநாதேசுவர் | அழகாம்பிகை |
| 162. | திருநனிபள்ளி | நற்றுணையப்பர் | மலையான்மடந்தை |
| 163. | திருநன்னிலம் | மதுவனேசுரர் | மதுவனநாயகி |
| 164. | திருநாகேச்சுரம் | நாகநாதர் | குன்றமுலைநாயகி |
| 165. | திருநாகைக்காரோணம் (நாகப்பட்டினம்) | காயரோகணஈசுவரர் | நீலநெடுங்கண்ணி |
| 166. | திருநாட்டியத்தான்குடி | மாணிக்கவண்ணர் | மலைமங்கையம்மை |
| 167. | திருநாரையூர் | சுந்தரேசுவரர் | திரிபுரசுந்தரியம்மை |
| 168. | திருநாலூர்மயானம் | பலாசவனேசுவரர் | பெரியநாயகி |
| 169. | திருநாவலூர் | திருநாவலேசுவரர் | சுந்தரநாயகி |
| 170. | திருநின்றியூர் | நின்றியூர்அண்ணல் | உலகநாயகி |
| 171. | திருநீடூர் | அருட்சோமநாதர் | வேயுறுதோளி |
| 172. | திருநீலக்குடி | நீலகண்டர் | உமையம்மை |
| 173. | திருநெடுங்களம் | நெடுங்களம்மேயவர் | ஒப்பிலா நாயகியம்மை |
| 174. | திருநெய்த்தானம் | நெய்யாடியப்பர் | இளமங்கையம்மை |
| 175. | திருநெல்லிக்கா | நெல்லிவனநாதர் | மங்களநாயகி |
| 176. | திருநெல்வாயில்(சிவபுரி) | உச்சிநாதர் | பொன்னம்மை |
| 177. | திருநெல்வாயில் (அரத்துறை) | அரத்துறைநாதர் | ஆனந்தநாயகி |
| 178. | திருநெல்வெண்ணை | வெண்ணையப்பர் | நீலமலர்க்கண்ணம்மை |
| 179. | திருநெல்வேலி | நெல்லையப்பர் | வடிவம்மை |
| 180. | திருப்பட்டீச்சுரம் | பட்டியப்பர் | பச்சைநாயகி |
| 181. | திருப்பந்தணைநல்லூர் | பசுபதீசுவரர் | காம்பனதோளி |
| 182. | திருப்பயற்றூர் | திருப்பயற்றீசுவரர் | காவியங்கண்ணி |

| வ.எண் | தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|---|
| 183. | திருப்பரங்குன்று | பரங்குன்றநாதர் | ஆளுடைநாயகி |
| 184. | திருப்பராய்த்துறை | பராய்த்துறைநாதர் | பொன்மயிலம்மை |
| 185. | திருப்பரிதிநியமம் | பரிதியப்பர் | மங்களநாயகி |
| 186. | திருப்பருப்பதம்(சீபர்ப்பதம்) | பருப்பதநாதர் | பருப்பதநாயகி |
| 187. | திருப்பழனம் | இடர்த்துணைநாதர் | பெரியநாயகி |
| 188. | திருப்பழுவூர் | ஆலடியப்பர் | அருந்தவநாயகி |
| 189. | திருப்பழையாறைவடதளி | வடதளிநாதர் | கௌரியம்மை |
| 190. | திருப்பள்ளியின்முக்கூடல் | முக்கோணநாதர் | மைம்மேவுகண்ணி |
| 191. | திருப்பறியலூர் (பரசலூர்) | வீரட்டேசுவரர் | இளங்கொடியம்மை |
| 192. | திருப்பனங்காட்டூர் | பனங்காட்டீசுவரர் | அமிர்வதல்லியம்மை |
| 193. | திருப்பனந்தாள் | செஞ்சடையப்பர் | பெரியநாயகி |
| 194. | திருப்பனையூர் | அழகப்பர் | பெரியநாயகி |
| 195. | திருப்பாசூர் | பாசூர்நாதர் | பசுபதிநாயகி |
| 196. | திருப்பாச்சிலாச்சிராமம் (திருவாசி) | மாற்றறிவரதர் | இளையஅழகியாள் |
| 197. | திருப்பாண்டிக்கொடுமுடி | கொடுமுடிநாதர் | பண்மொழியம்மை |
| 198. | திருப்பாதாளீச்சுரம் (பாமணி) | நாகநாதர் | அமிர்தநாயகி. |
| 199. | திருப்பாதிரிப்புலியூர் | தோன்றாத்துணையப்பர் | தோகைநாயகி |
| 200. | திருப்பாம்புரம் | பாம்புரநாதர் | வண்டார்பூங்குழலியம்மை |
| 201. | திருப்பாலைத்துறை | பாலைவனநாதர் | தவளவெண்ணகையம்மை |
| 202. | திருப்பாற்றுறை | மூலநாதேசுவரர் | மேகலையம்மை |
| 203. | திருப்புகலூர் | கோணப்பிரான் | கருந்தாழ்குழலி |
| 204. | திருப்புகலூர்வர்த்தமானீச்சுரம் | வர்த்தமானேசுவரர் | கருந்தாழ்குழலி |
| 205. | திருப்புத்தூர் | திருத்தளிநாதர் | சிவகாமியம்மை |
| 206. | திருப்புள்ளமங்கை | ஆலந்தரித்தநாதர் | அல்லியங்கோதை |
| 207. | திருப்புள்ளிருக்குவேளூர் | வைத்தியநாதர் | தையல்நாயகி |
| 208. | திருப்புறம்பயம் | சாட்சிநாதர் | கரும்பன்னசொல்லம்மை |
| 209. | திருப்புறவார்பனங்காட்டூர் | பனங்காட்டீசுவரர் | புறவம்மை |
| 210. | திருப்புனவாயில் | பழம்பதிநாதர் | கருணைநாயகி |
| 211. | திருப்புன்கூர் | சிவலோகநாதர் | சொக்கநாயகி |
| 212. | திருப்பூந்துருத்தி | பொய்யிலியப்பர் | அழகம்மை |
| 213. | திருப்பூவணம் | பூவணநாதர் | மின்னனையாளம்மை |
| 214. | திருப்பெண்ணாகடம் | சுடர்க்கொழுந்தீசர் | கடந்தைநாயகி |

| வ.எண் | தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|---|
| 215. | திருப்பூவனூர் | பூவனூர்அப்பர் | கற்பகவல்லியம்மை |
| 216. | திருப்பெரும்புலியூர் | பெரும்புலியூர்பிரியார் | சுந்தரநாயகி |
| 217. | திருப்பெருவேளூர் (ஐயன்பேட்டை) | பெருவேளூரார் | மின்னனையாளம்மை |
| 218. | திருப்பேணுபெருந்துறை | சிவாநந்தேசுவரர் | மலையரசியம்மை |
| 219. | திருப்பேரெயில் (ஓகைப்பேரையூர்) | பேரெயிலாளர் | பேரெயில்அம்மை |
| 220. | திருப்பைஞ்ஞீலி | நீலமணிமிடற்றர் | அசலநெடுங்கண்ணி |
| 221. | திருமங்கலக்குடி | மங்கலக்குடிஈசர் | மங்களநாயகி |
| 222. | திருமணஞ்சேரி | அருள்வள்ளல்நாதர் | யாழின்மென்மொழியம்மை |
| 223. | திருமண்ணிப்படிக்கரை (இலுப்பைப்பட்டு) | நீலகண்டேசுவரர் | அமிர்தகரவல்லியம்மை |
| 224. | திருமயிலாடுதுறை(மாயூரம்) | மாயூரநாதர் | அபயாம்பிகை |
| 225. | திருமயிலாப்பூர் | கபாலீசுவரர் | கற்பகவல்லியம்மை |
| 226. | திருமயேந்திரப்பள்ளி | திருமேனியழகர் | வடிவாம்பிகை |
| 227. | திருமருகல் | மாணிக்கவண்ணர் | வண்டுவார்குழலம்மை |
| 228. | திருமழபாடி | வயிரத்தூண்நாதர் | அழகாம்பிகை |
| 229. | திருமறைக்காடு | மறைக்காட்டப்பர் | யாழைப்பழித்தமொழியம்மை |
| 230. | திருமாகறல் | அடைக்கலம்காத்தநாதர் | புவனநாயகி |
| 231. | திருமாணிகுழி | மாணிக்கவரதர் | மாணிக்கவல்லி |
| 232. | திருமாந்துறை | மாந்துறையப்பர் | அழகம்மை |
| 233. | திருமாற்பேறு | மால்வணங்கீசுவரர் | அருள்அம்மை |
| 234. | திருமீயச்சூர் | முயற்சிநாதர் | சுந்தரநாயகி |
| 235. | திருமீயச்சூர்இளங்கோயில் | அனைத்துலகநாதர் | மின்னுமேகலையாள் |
| 236. | திருமுண்டீச்சுரம் | சிவலோகநாதர் | கானார்குழலியம்மை |
| 237. | திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) | பழமலைநாதர் | பெரியநாயகி |
| 238. | திருமுருகன்பூண்டி | முருகநாதர் | முயங்குபூண்முலையம்மை |
| 239. | திருமுல்லைவாயில்(வட) | மாசிலாமணீசுவரர் | கொடியிடைநாயகி |
| 240. | திருமுல்லைவாயில்(தென்) | முல்லைவனநாதர் | கோதையம்மை |
| 241. | திருமூக்கீச்சுரம்(உறையூர்) | ஐவண்ணநாதர் | காந்திமதியம்மை |
| 242. | திருவக்கரை | சந்திரசேகரர் | வடிவம்மை |
| 243. | திருவடுகூர் | வடுகேசுவரர் | வடுவகிர்க்கண்ணி |
| 244. | திருவலஞ்சுழி | கற்பகநாதர் | பெரியநாயகி |
| 245. | திருவலம்புரம்(பெரும்பள்ளம்) | வலம்புரநாதர் | வடுவகிர்க்கண்ணம்மை |

